THE

# TWO SISTERS

OR

# LILAVATHI-SULOCHANA

A TAMIL DRAMA

BY

**Rao Saheb P. SAMBANDAM,** B.A., B.L.

Author of :

"The Bandit Chief," "Sabapathy," "The Good Fairy," "Manohara," "Blind Ambition," "The Demon Land," "Fate and Love" "Sarangadhara," "Simhalanatha," "Pushpavalli," "Amaladitya," "Magapathi," "Galava," "The Two Friends," "The Golden Fetters," "Farces," "Siruthondar," "Markandeya," "The Fair Ghost," "The Merchant of Vanipura," "The Wedding of Valli," "The Eye of Love," "Vijayarangam," "As you like it," "Ratnavali," "Lord Buddha," "The Tragedy of Silence," "True Love," "Geetha Manjari," "Harischandra," "As We Sow-So We Reap," "The Curse of Oorvasi," etc. in Tamil, and "Harischandra," and "Yayathi" in English.

SIXTH EDITION

Madras :

PRINTED BY DOWDEN AND CO., AT THE "PEERLESS PRESS,"

21, Sunkurama Chetty Street.

1923.

2537

 (Price per Copy ~~As. 12~~. 1-12-0

உ

# லீலாவதி-சுலோசனை

அல்லது

# இரண்டு சகோதரிகள்

இந்த தமிழ் நாடகம்

ராவ் சாஹெப்

**ப. சம்பந்த முதலியார், பி-ஏ., பி-எல்.,**

அவர்களால் இயற்றப்பட்டது.

(இந்த நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்ற நூல்கள் :—
"இரண்டு நண்பர்கள்," "கள்வர் தலைவன்," "மனோஹரன்,"
"மார்க்கண்டேயர்" "சாரங்கதரன்," "வேதாள உலகம்,"
"சத்ருஜித்," "யயாதி," "காலவரிஷி," "அமலாதித்யன்,"
"காதலர் கண்கள்," "பேயல்ல-பெண்மணியே," "மகபதி,"
"மெய்க்காதல்," "பொன் விலங்குகள்," "சிம்ஹளநாதன்,"
"விரும்பிய விதமே," "சிறுத்தொண்டர்," "நற்குல தெய்வம்,"
"வாணீபுர வணிகன்," "ரஜபுத்ரவீரன்," "ஹரிச்சந்திரன்,"
"ரத்னவளி," "புஷ்பவல்லி," "கீதமஞ்சரி," "சபாபதி,"
"பிரஹசனங்கள்," "ஊர்வசியின் சாபம்," "விஜயரங்கம்,"
"முற்பகற் செய்யின் பிற்பகல் விளையும்," "வள்ளி மணம்,"
"புத்த அவதாரம்" முதலியன.) :: :: :: :: ::

ஆறும் பதிப்பு




சென்னை :
டௌடன் கம்பெனியாரின்
"பியர்லெஸ்" அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1923.

 [விலை அணா 12.

1-12-0

INSCRIBED

TO

THE BELOVED MEMORY OF

**MY MOTHER**

P. MANICKAVELU AMMAL

" Far off thou art but ever nigh
  I have thee still and I rejoice
I prosper, circled with thy voice
  I shall not lose thee, tho' I die "

*Tennyson.*

# Preface to the Sixth Edition

I have received so many requests from societies, amateur and professional wishing to stage this drama, to let them know what portion can be cut down so that the drama may be acted in four hours, that I thought, a stage-edition of the drama would be welcome; I have therefore brought out this edition omitting such portions as are not necessary in acting the drama.

Once again I have to repeat the caution that societies desiring to stage this or any other drama of mine must previously obtain permission to do so, otherwise they become liable to be prosecuted under the latest copyright act in a Criminal Court.

"PAMMAL LODGE"
MADRAS
30th May 1923.

THE AUTHOR.

# லீலாவதி - சுலோசனை

## நாடக பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| வாசவதத்தர் | ... ... | பாஞ்சாலதேசத்து அரசன் |
| ஸ்ரீதத்தர் | ... ... | வாசவதத்தனுடைய குமாரன் |
| பிரதாபசீலர் | ... ... | வாசவதத்தனுடைய தம்பியின் குமாரன் |
| பராக்கிரமகேது | ... ... | ஹஸ்தினபுரத்து அரசன் |
| கமலாகரர் | ... ... | ஸ்ரீதத்தனுடைய அந்தரங்க நேசன் |
| கருணாகரர் | ... ... | ஹஸ்தினபுரத்திற்கு அனுப்பப்பட்ட ஓர் ராயபாரி |
| விக்கிரமவீரன் | ... ... | பாஞ்சால தேசத்துச் சேனாதிபதி |
| குணசேனர் | ... ... | வாசவதத்தனுடைய அரண்மனை அதிகாரி |
| விசித்திரசர்மன் | ... ... | வாசவதத்தனுடைய அரண்மனை விதூஷகன் |
| தந்தவக்கிரன்<br>துன்மதி | ... ... | பராக்கிரமகேதுவின் அரண்மனையைச் சார்ந்த இரண்டு சேவகர்கள் |
| சாரங்கன் | ... ... | ஓர் காட்டுப்புறத்து வழிப்போக்கன் |
| சித்திரரேகை | ... ... | வாசவதத்தனுடைய இரண்டாம் மனைவி |
| காந்திமதி | ... ... | பராக்கிரமகேதுவின் மனைவி |
| லீலாவதி<br>சுலோசனை | ... ... | பராக்கிரமகேதுவின் பெண்கள் |
| பத்மாக்ஷி | ... ... | ஸ்ரீதத்தனுடைய தங்கை |
| மல்லிகை | ... ... | லீலாவதியின் அந்தரங்க தோழி |

சேவகர்கள், தோழிகள் முதலானோர்.

---

கதை நிகழிடம்:—பெரும்பாலும் பாஞ்சால தேசத்து முக்கிய பட்டணமாகிய காம்பிலி நகரத்திலும், சிலபாகம் யுவராஜ நகரத்திலும், ஹஸ்தினபுரத்திலும், பாஞ்சாலத்திற்கும் ஹஸ்தினபுரத்திற்கும் இடையிலுள்ள ஓர் வனத்திலும்.

# லீலாவதி – சுலோசனை

## நாடக பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| வாசவதத்தர் | ... ... | பாஞ்சாலதேசத்து அரசன் |
| ஸ்ரீதத்தர் | ... ... | வாசவதத்தனுடைய குமாரன் |
| பிரதாபசீலர் | ... ... | வாசவதத்தனுடைய தம்பியின் குமாரன் |
| பராக்கிரமகேது | ... ... | ஹஸ்தினபுரத்து அரசன் |
| கமலாகரர் | ... ... | ஸ்ரீதத்தனுடைய அந்தரங்க நேசன் |
| கருணாகரர் | ... ... | ஹஸ்தினபுரத்திற்கு அனுப்பப்பட்ட ஓர் ராயபாரி |
| விக்கிரமவீரன் | ... ... | பாஞ்சால தேசத்துச் சேனாதிபதி |
| குணசேனர் | ... ... | வாசவதத்தனுடைய அரண்மனை அதிகாரி |
| விசித்திரசர்மன் | ... ... | வாசவதத்தனுடைய அரண்மனை விதூஷகன் |
| நந்தவக்கிரன், துன்மதி | ... ... | பராக்கிரமகேதுவின் அரண்மனையைச் சார்ந்த இரண்டு சேவகர்கள் |
| சாரங்கன் | ... ... | ஓர் நாட்டுப்புறத்து வழிப்போக்கன் |
| சித்திரரேகை | ... ... | வாசவதத்தனுடைய இரண்டாம் மனைவி |
| காந்திமதி | ... ... | பராக்கிரமகேதுவின் மனைவி |
| லீலாவதி, சுலோசனை | ... ... | பராக்கிரமகேதுவின் பெண்கள் |
| பத்மாக்ஷி | ... ... | ஸ்ரீதத்தனுடைய தங்கை |
| மல்லிகை | ... ... | லீலாவதியின் அந்தரங்க தோழி |

சேவகர்கள், தோழிகள் முதலானோர்.

---

கதை நிகழிடம்:—பெரும்பாலும் பாஞ்சால தேசத்து முக்கிய பட்டணமாகிய காம்பிலி நகரத்திலும், சிலபாகம் யுவராஜ நகரத்திலும், ஹஸ்தினபுரத்திலும், பாஞ்சாலத்திற்கும் ஹஸ்தினபுரத்திற்கும் இடையிலுள்ள ஓர் வனத்திலும்.

# லீலாவதி-சுலோசனை



## முதல் அங்கம்

### முதல் காட்சி

இடம்—பராக்கிரமகேதுவினுடைய அரண்மனை நந்தவனத்தருகிலுள்ள ஒரு வீடு. காலம்—மாலை.

காந்திமதி, லீலாவதி, சுலோசனை, பத்மாக்ஷி, தோழியர்களுடன் உட்கார்ந்திருக்கிறார்கள்.

லீ. பத்மாக்ஷி, நீ என்ன வந்தது முதல் சுலோசனையை விடாது எந்நேரமும் அவளுடனேயே பேசிக்கொண்டிருக்கிறாயே? இந்நேரம் எங்கிருந்தீர்கள் நீங்களிரண்டு பேரும்? என்ன பேசிக்கொண்டிருந்தீர்கள்?

பத். ஒன்றுமில்லை லீலாவதி, நாங்களிரண்டுபேரும் தோட்டத்தில் கழலாடிக்கொண்டிருந்தோம்.

சு. அம்மா, பத்மாக்ஷி நாளைக்குக் காம்பிலிக்குத் திரும்பிப் போகவேண்டுமாம்; நீங்களாவது சொல்லி இங்கே இன்னும் நாலைந்து நாள் இருக்கும்படி சொல்லுங்களம்மா.

லீ. ஏது! பத்மாக்ஷியும் சுலோசனையும் பெரிய சினேகர்களாய்விட்டாற்போலிருக்கிறது! மத்தியானம் இருவரும் பூஞ்சோலையில் உட்கார்ந்துகொண்டு முத்தமிட்டுக்கொண்டிருந்தார்கள்! ஏதோ விசேஷந் தெரியவில்லை.

கா. ஏனம்மா பத்மாக்ஷி, நீ இன்னும் இரண்டு மூன்று நாள் இங்கேயிருந்து போகிறதுதானே? இதற்குள்ளே உனக்கென்ன அவசரம்? காலையில்தானே வந்தாய்.

பத். இல்லை அம்மா, நான் சீக்கிரம் போகவேண்டும்— இதோ மஹாராஜா வருகிறார். [எல்லோரும் எழுந்திருக்கிறார்கள்.]

பராக்கிரமகேது வருகிறார்.

பரா. ஒஹோ! பத்மாக்ஷி, உன்னைக் கண்டு நெடுநாளாயிற்று. ஏது இப்பொழுது ஹஸ்தினபுரத்தின்மீது தயை பிறந்தது உனக்கு?

பத். ஐயனே, சுலோசனையையும் லீலாவதியையும் பார்த்து நெடுநா ளாயிற்றே பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன்.

பரா. பத்மாக்ஷி, பிதா முதலிய எல்லோருஞ் சுகந்தானே?

பத். எல்லோரும் சௌக்கியமாகத்தா னிருக்கிறார்கள்; பிதா உம்மை மிகவும் விசாரித்ததாகச் சொல்லச் சொன்னார்.

பரா. உன்னுடைய தமயன் எப்படி யிருக்கிறார்?

பத். சவுக்கியமாகத்தா னிருக்கிறார்.

பரா. காந்திமதி, உலகில் மன்னனைப் பிறந்தால் வாசவதத்தரைப்போற் பிறக்கவேண்டும். அவருக்கு என்ன குறை யிருக்கிறது?

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற"

என்பதுபோல சகல நல்லறிவும் கலை ஞானமும் ரூப லாவண்யமுடைய மாணிக்கங்கள் போன்ற ஒரு புத்திரனையும் புத்திரியையும் பெற்றார். அவருக்கு வேறென்ன வேண்டும்? அவர் எனது நண்பரா யிருந்தும் அவரைப் பார்க்கும்போ தெல்லாம் எனக்குச் சற்று பொறாமை யாகவே யிருக்கிறது. நான் மற்றெல்லாப் பேறுகளையும் பெற்றிருந்தும் புத்திர னில்லாம லிருக்கிறேன். இதைப் பார்க்கிலும் எனக்கு வேறென்ன வியாகூலம் வேண்டும்? —கிட்டாத பொருளைப்பற்றி நாம் விசனப்படுவதில் என்ன பிரயோஜனம்? [பெருமூச்செறிகிறார்.]

பத். [ஒருபுறமாக சுலோசனையோடு] மகனைப் பெறுவிட்டாலும் சீக்கிரத்தில் மருகனைப் பெறுவார் சுலோசனு!

பரா. காந்திமதி, அம்மட்டும் சுவாமி நம்மீது கருணை கூர்ந்து இரண்டு பெண்களையாவது கொடுத்திருக்கிறுரே! இது வும் நம்முடைய பாக்கியந்தான். லீலாவதி, நீ ஓர் ஆண் பிள்ளையாகப் பிறந்திருப்பாயாயின் நான் எவ்வளவு சந் தோஷ முள்ளவனு யிருப்பேன்! உன்னுடைய புத்திக்கு நீ ஆண்பிள்ளையாகவே பிறந்திருக்கவேண்டும்!—நான் இனி ஒரு மகனைப் பெறுவே னென்னும் ஆசையை விட்டுவிட்டேன்.

கா. பிராணநாதா, நீர் கூறுவது உண்மையே. எல்லாச் செல் வங்களிருந்தும் ஓர் ஆண் குழந்தை யில்லாத செல்வ முஞ் செல்வமா?

சு. அண்ணு, பத்மாக்ஷி நாளைக்குக் காம்பிலி நகரத்திற்குப் போகவேண்டுமாம். நீங்கள் அவளுடைய தந்தைக்கு ஒரு நிருபமெழுதி ஐந்தாறு நாட்கள் பொறுத்து அனுப் புவதாகச் சொல்லுங்கள்.

பரா. பத்மாக்ஷி, இதற்குள்ளாக என்ன அவசரம் உனக்கு?

பத். அப்படி மிகுந்த அவசரம் ஒன்றுமில்லை. நான் திரும் பிப் போகும்பொழுது சுலோசனையை என்னுடன் அனுப் பும் பட்சத்தில் நானின்னும் இங்கேயே இரண்டு மூன்று நாளிருக்கிறேன்.

ஒரு தோழி வருகிறுள்.

தோ. மஹாராஜா, பாஞ்சாலதேசத்து மஹாராஜாவிடமிருந்து உம்மைக் காண்பதற்காக ஓர் ராயபாரி வந்திருக்கிறுர்.

பரா. அப்படியா? பத்மாக்ஷி, உனது பிதாவிடமிருந்து யாரோ வந்திருக்கிறுர்போ லிருக்கிறது. நான் போய் என்ன சமாசாரமென்று விசாரித்து வருகிறேன். நீங்களெல் லோரும் இங்கேதானே இருங்கள்; இதோ வந்துவிட் டேன். [பராக்கிரமகேது போகிறுர்.]

கா. பத்மாக்ஷி, என்ன சமாசாரம் வந்திருக்கும் உன் பிதா விட மிருந்து ?

பத். எல்லாம் சுப சமாசாரமாகவே இருக்குமென்று நினைக்கிறேன்.

லீ. பத்மாக்ஷி, உனது தமயனுருக்கு எத்தனை குழந்தைகள் ?

பத். சீ ! பரிகாசஞ் செய்கிருயா என்ன ? இன்னும் அவருக்கு விவாகமே ஆகவில்லையே !

கா. பத்மாக்ஷி, உனக் கெப்பொழுது கலியாணம் ?

பத். தக்க புருஷன் அகப்படும்பொழுது கலியாணந்தான் !

கா. உனக்குத் தகுந்த புருஷன் எப்படிப்பட்டவரா யிருக்க வேண்டும் ?

சு. ஆ ! அகப்பட்டுக்கொண்டாய் பத்மாக்ஷி ! உனக்குத் தகுந்த கணவன் எப்படி யிருக்கவேண்டும், சொல்.

பத். உனக்குத் தகுந்த புருஷன் எப்படி யிருக்கவேண்டும் ? நீ சொல்.

கா. அப்படியல்ல, நான் சொல்லுகிறதைக் கேளுங்கள். நான் உங்கள் மூவரையும் ஒவ்வொருவராகக் கேட்டுக் கொண்டு வருகிறேன். உங்களுடைய உண்மையான எண்ணத்தை எனக்குக் கூறவேண்டும். நீ என்ன சொல்லுகிருய் பத்மாக்ஷி ?

பத். லீலாவதியை முன்பு சொல்லச் சொல்லுங்கள்.

லீ. ஏன் நீதான் சொல்! இல்லாவிட்டால் சுலோசனையைச் சொல்லச் சொல்லுங்கள்.

சு. நீதான் சொல் அக்காள் முன்னே.

கா. சரி, பொறுங்கள் ; லீலாவதி, நீ எல்லோரையும் பார்க்கிலும் மூத்தவள், ஆகவே நீ முன்பு சொல்.

பத். ஆ ! அப்படி !

லீ. நானென்ன சொல்லுவது ?—எனக்குக் கணவன் சக்ரவர்த்தியின் மூத்த குமாரரும், நல்ல அழகு வாய்ந்தவ

ரும், சகல ஐஸ்வரியமும் பொருந்தியவருமா யிருக்க வேண்டும். குணம் எப்படி யிருந்தபோதிலும் பெரிதன்று, எல்லாவற்றையும் திருப்பி என் வழிக்குக் கொண்டு வந்துவிடுவேன்.

கா. எப்பொழுதும் உன்னுடைய குணத்தையே காட்டுகிறாயே லீலாவதி!

லீ. ஆமாம்! உங்களைப்போல் ஏமாந்தவளென்று நினைக்கிறீர்களோ என்னை?

கா. சரி, சுலோசனா உனக்கெப்படிப்பட்ட கணவன் வேண்டும்?

சு. எனக்குக் கணவனே வேண்டாம்.

பத். ஆ! ஆ! இதோ என்னைப் பார்த்துச் சொல்! அப்படியா சமாசாரம்! பொய் பேசாதே! நிஜத்தைச் சொல்லிவிடு.

சு. அம்மா, என் கணவர் சகல நற்குணமும் நல்லறிவும் பெற்றவராயும், நல்ல அழகுடையவராயும், எப்பொழுதும் எந்த ஜன்மத்திலும் என்னைவிட்டுப் பிரியாது என் மீதிலேயே காதல்கொண் டிருப்பவராயும், வேறெந்த ஸ்திரீயையும் கண்ணெடுத்தும் பாராதவராயும் இருக்க வேண்டும். நானும் எப்பொழுதும் எந்த ஜன்மத்திலும் அவரை விட்டுப் பிரியாது அவர்மீதிலேயே காதல்கொண் டிருக்கவேண்டும். இதுவே என்னுடைய விருப்பம்.

பத். கண்ணே, நீ அப்படிப்பட்ட கணவனையே சீக்கிரம் மணம் புரிவாயாக. [சுலோசனைக்கு முத்தமிடுகிறாள்.]

கா. கண்ணே, அதுதான் என்னுடைய விருப்பம்.

லீ. ஆம், சுலோசனை அப்படிப்பட்ட கணவனைப் பெறுவதற்கு இவ் வுலகத்தைவிட்டு வேறுலகத்திற்குத்தான் போய் தேடவேண்டும்.

கா. அதிருக்கட்டும், பத்மாக்ஷி, உன் னெண்ண மென்ன ?—

பராக்கிரமகேது வருகிறார்.

பரா. காந்திமதி, நான் ஒரு சுப சமாசாரம் கொண்டு வந்திருக்கிறேன், அது என்னவென்று நினைக்கிறாய் ?

கா. என் மனதிற்கு ஒன்றுந் தோன்றவில்லை ; என்ன விசேஷம் ? சீக்கிரம் சொல்லும்.

பரா. நான் மகனில்லையேயென்று சற்று முன்பாக வருத்தப்பட்டேனல்லவா ? அதற்குப் பதிலாக சுவாமி நமக்கொரு மருமகனைச் சீக்கிரத்தில் கொடுப்பார்போ லிருக்கிறது.

[ஒரு மணவோலையைக் காந்திமதி கையிற் கொடுக்கிறார்.]

கா. மிகவும் சந்தோஷம், பாஞ்சாலதேசத்தி லிருந்தா இம் மணவோலை வந்தது ?

பரா. ஆமாம் வாசவதத்தர் இந் நிருபத்தை அனுப்பி யிருக்கிறார். அங்கிருந்து வந்த ராயபாரி ஸ்ரீதத்தனுக்கு நம்முடைய சுலோசனையைக் கேட்கிறார் ; நீ என்ன சொல்லுகிறாய் ?

கா. நானென்ன சொல்வது ? இப்படி ஏதாவது நடக்குமாவென்று நானும் காத்துக்கொண் டிருந்தேன். பழம் நழுகிப் பாலில் விழுந்தது போலும்—ஆயினும் மூத்த பெண்ணிருக்க இளையவளுக்கு எப்படி முன்பு விவாகஞ் செய்து கொடுப்பது ?

பரா. அதிலொன்றுந் தவறில்லை; காந்தர்வ மணம்புரியும் க்ஷத்திரியர்களாகிய நமக்குள்ளே தற்காலம் இவ் வழக்கம் சாதாரணமாக வுண்டு. [ஒருபுறமாய் காந்திமதியோடு] அங்கிருந்து வந்த ராயபாரியிடம் லீலாவதி மூத்த பெண் இருக்கிறாள், சிறந்த புத்திசாலி, அவளை விவாகஞ் செய்து கொள்ளுகிறது தானே என்று நான் சொல்லிப் பார்த்தேன். அவர் அதற் கிசையாது ஒரே பிடிவாதமாய்ச் சுலோசனைதான் வேண்டுமென்கிறார், நாம் என்ன செய்யலாம் ? மறுப்போமாயின் வாசவதத்த ராஜனுக்கு மனஸ்தாபம் வரும். பிறகு அவர் கோபங் கொண்டு

நம்மீது படை யெடுத்து வருவாராயின், சுத்த வீரனுகிய ஸ்ரீதத்தன் ஒருவனே போதும் நம்முடைய படைகளை யெல்லாம் அழிப்பதற்கு. அதுவு மன்றி இந்தச் சம்பந்தம் நமக்கு வாய்க்கத் தக்கதன்று; ஸ்ரீதத்தனுக்குத் தங்கள் பெண்களைக் கொடுப்பதற்காக எல்லாத் தேசத்தரசர்களும் காத்துக்கொண் டிருக்கிறார்கள். நம்மை முதலிற் கேட்டது நம்முடைய பாக்கியம். இதனை நாம் கைவிடலாகாது.

கா. ஆனல் சரிதான்.

பரா. சுலோசனு, என்ன தலை குனிந்து நிற்கிருய்? உன் னிஷ்டத்தைச் சொல்.—என்ன சும்மா இருக்கிருய்? பயப்பட வேண்டாம் அம்மா, சொல்.

லீ. சுலோசனையினுடைய இஷ்டத்தைக் கேட்பானேன்? இதைப்பற்றிதான் அவளும் பத்மாக்ஷியும் காலை முதல் பேசிக்கொண் டிருந்தார்கள்போ லிருக்கிறதே!

சு. அண்ணு, உங்களுடைய இஷ்ட மெப்படியோ அப்படியே என்னுடைய இஷ்டமும்.

கா. கண்ணே, சுலோசனு, நீ சீக்கிரத்தில் ஸ்ரீதத்தனை மணம் புரிந்து, என்றும் பிரியாது, அவனுடன் வாழ்ந்திருப்பாயாக. [சுலோசனைக்கு முத்த மிடுகிருள்.]

பரா. ஆனல் காந்திமதி, இதில் இன்னெரு சங்கட மிருக்கிறது. வாசவதத்தர் எழுதிய நிருபத்தில் விவாகம் தனது பட்டணத்தில் நடக்கவேண்டு மென்று எழுதியிருக்கிருர். இதற் கென்ன செய்வது?

கா. அது எப்படி முடியும்? நம்முடைய பட்டணத்திலேதான் விவாக மாகவேண்டும்.

பரா. அங்கிருந்து வந்த கருணகரர் என்னும் ராயபாரி இதைப் பற்றி ஒரே பிடிவாதமாகச் சொல்லுகிருர்.

கா. அவரை இங் கழைத்து நா மிருவரும் சொல்லிப் பார்ப்போம். அஞ்சனு, அவரை இங்கு அழை.

[ஒரு தோழி போகிருள்.]

லீலாவதி, சுலோசனை, பத்மாக்ஷி, நீங்க ளெல்லாரும் தோட்டத்திற்குப் போய் பந்தடித்து விளையாடிக்கொண் டிருங்கள். இதோ நான் வந்துவிட்டேன்.

[லீலாவதி, சுலோசனை, பத்மாக்ஷி மூவரும் தாதியருடன் போகிறார்கள்.]

பரா. இவ்வளவும் பத்மாக்ஷியின் வேலையென்று நினைக்கிறேன்.

[லீலாவதி மாத்திரம் திரும்பி வந்து, ஒருவ ரும் அறியாதபடி அறையிலிருக்கும் ஒரு திரைக்குள் ஒளிந்துக்கொள்ளுகிறாள்.]

தோழியும், கருணாகரரும் வருகிறார்கள்.

[கருணாகரர் பராக்கிரமகேதுவுக்கும் சாந்தி மதிக்கும் நமஸ்காரம் செய்கிறார்.]

கருணாகரரே, இந்த விவாகம் தனக்கும் சம்மதிதா னென்று கூறுகிறாள் எனது பட்டமகிஷி. ஆயினும் விவாகம் அவ்விடம் நடப்பதற்கு மாத்திரம் உடன்படே னென்கிறாள்; இதற்கென்ன சொல்லுகிறீர்?

கரு. மஹாராஜா, நான் இதற்குக் காரணங்களை யெல்லாம் முன்பே கூறினேனே; எம திளவரசர் ஏதோ சிறிது மன வியாகூலமுற் றிருக்கிறார்; அம் மனோவியாகூலத்தைப் போக்கும் பொருட்டே அவருக்குக் கூடிய சீக்கிரத்தில் தக்க பெண்ணைப் பார்த்து விவாகஞ் செய்யத் தீர்மா னித்தது; இங்கு வருவதென்றால் அவருக்கு ஒரு வேளை இஷ்டமில்லா திருக்கினு மிருக்கும். விவாகம் எங்கு நடந்தாலுமென்ன? இதுவுந் தங்களுடைய தேசந்தான், அதுவுந் தங்களுடைய தேசந்தான். இதிற் பேத மென்ன? அதுவுமன்றி இம் மாதிரியாக விவாகங்கள் பிள்ளையின் தேசத்தில் நடப்பது க்ஷத்திரியர்களுக்குள் சாதாரண வழக்கந்தானே, ஒன்றும் நூதன மன்றே! வாசவதத்தராஜன் இதை மாத்திரம் தாங்கள் அனுக்கிர கிக்க வேண்டுமென்று கேட்கும்படி எனக்குக் கட்டளை யிட் டிருக்கிறார்.

பரா. காந்திமதி, எனது நண்பர் இவ்வளவு கேட்கும்பொழுது நான் தடுப்பது முறைமை யன்று; என்ன சொல்லு கிறாய்?

கா. அப்படியே ஆகட்டும் ஆனால்.

பரா. ஆனால் நடந்த விஷயங்களை யெல்லாம் வாசவதத்த ராஜருக்கு நீர் எழுதிவிடும்; நானும் ஒரு நிருபம் அனுப்பு கிறேன். இன்னும் இரண்டு மூன்று தினங்களுக்குள் முகூர்த்தம் முதலியவைகளை யெல்லாம் குறித்துக் கொண்டு நாமெல்லோரும் புறப்படுவோம்.

கரு. மிகவும் சந்தோஷம் மஹாராஜா. [போகிறார்.]

பரா. காந்திமதி, நான் சீக்கிரம் விவாகத்திற்கு வேண்டிய காரியங்களை யெல்லாம் சித்தஞ் செய்யவேண்டும்; நீ சென்று லீலாவதிக்குத் தேறுதல் சொல்; ஒரு வேளை தனக்கு முதலில் விவாக மாகவில்லையே யென்று விசனப்படப் போகிறாள்-அவள் அம்மாதிரி விசனப்படுபவ ளல்ல; ஆயினும் போய்ப்பார். அவளுக்கும் சீக்கிரத்திலே தக்க ஓர் ராஜ குமாரனைப் பார்த்து விவாகஞ் செய்துவிட வேண்டும். இச் சுபகாரியம் சீக்கிரத்தில் ஒரு குறையு மின்றி முடிவு பெறுமென்று கோருகிறேன்.

[காந்திமதி ஒரு புறமாகவும், பராக்கிரம கேது ஒரு புறமாகவும் போகிறார்கள்.]

லீலாவதி திரைக்குள்ளிருந்து வெளியே வருகிறாள்.

லீ. இச் சுப காரியம் சீக்கிரத்தில் ஒரு குறையு மின்றி முடிவு பெறுமென்று கோருகிறீர்? நானுயிரோ டிருக்குமளவும் இவ்வாறு முடியப் போகிறதில்லை! அப்புறம் பார்த்துக் கொள்ளலாம். என்ன ஆச்சரியம்! தெய்வத்திற்குப் புத்தி சற்று குறைவென்றே தோற்றுகிறது. இல்லாவிட்டால் ஒரு வஸ்துவை அதன் ருசி யறிந்து அனுபவிக்கும் சக்தி யுடையவருக்குக் கொடுக்காது, அதன் மகிமை யறியாத மூடருக்குத் தானாகக் கொண்டுபோய்க் கொடுக்குமா? சுலோசனைக்கு உலக மென்பதே இன்னதென்று தெரி

யாதே! அவளா அழகில் ஒப்புயர்வற்ற ஸ்ரீதத்தராஜனுக்குப் பட்டமகிஷியாகி, அவருடைய தந்தைக்குப் பிற்காலம் அந் நாட்டிற் கெல்லாம் சக்ரவர்த்தினியுமாகி, ஸ்ரீதத்தருடன் கூடி எல்லாச் சுகங்களையும் அனுபவிக்கத் தக்கவள்? அவர் ஏதோ மனோவியாகூலங்கொண்டிருக்கிறாராம்—இந்தச் சுலோசனையா அதைத் தீர்க்கப் போகிறவள்? சீ! சுலோசனா! இப்பெருஞ் செல்வத்தை அனுபவிக்கத்தக்கவள் நீயல்ல, உனக்கென்ன தெரியும்? காக்கைக்கு மாணிக்கத்தைக் கொடுத்ததாகும்! சீ! ஸ்ரீதத்தராஜனை மணந்து பாஞ்சால தேசத்துச் சக்ரவர்த்தினியாவா யென்னும் எண்ணத்தை விட்டுவிடு. உன்மீது பொறாமைகொண்டு இவ்வாறு கூறினவளன்று நான். கேவலம் ஒன்றுந் தெரியாத பேதையாகிய உன்மீதோ நான் பொறாமை கொள்ளப் போகிறேன்? ஆயினும் இச் சுகங்களை யெல்லாம் அனுபவிக்கப் பிறந்துள்ளவள் நானே! நீ இவற்றை யெல்லாம் பெற்றால் உலகம் நகைக்கும்; பாத்திரமறிந்து பிச்சை யிடவேண்டுமென்பதை அறிந்தும், ஈசன் ஏன் இந்த உன்னத ஸ்திதியை அதனைப் பெறுதற்குத் தக்க குணத்தை உடைத்தாயிராத இந்தச் சுலோசனைக்குக் கொடுக்க முயலுகிறார்?—இருக்கட்டும், வாசவதத்தராஜன் எழுதிய மணவோலையில் எங்களிருவரில் ஒருத்தியைக் கேட்டிருக்கிறார்போ லிருக்கிறது; இங்குவந்த ராயபாரி சுலோசனையைக் கொடுக்கும்படி ஏன் கேட்டார்? அவளென்ன என்னைப் பார்க்கினும் அழகி யுயர்ந்தவளா? அல்லது புத்திசாலியா? ஓ! இப்பொழு தெல்லாந் தெரிகிறது பிதா இவையெல்லாம் பத்மாக்ஷியின் செய்கை யென்று கூறினர் அல்லவா? ஆம், இது பத்மாக்ஷியின் செய்கை யென்பதற்குச் சந்தேகமே யில்லை. பத்மாக்ஷி வந்தது முதல் சுலோசனையை விடாது, எந்நேரமும் பேசிக்கொண்டிருந்தா ளல்லவா? இத்தனைக்கும் ஒன்றுந் தெரியாத பூனைபோ லிருந்தாள். ஆஹா! பத்மாக்ஷி! நீ இவ்

வளவு சூதுள்ளவளென்று நான் எண்ணவே யில்லை. ஆயினும் என்னை ஏமாற்ற உன்னாலாகுமோ? அதைவிட சமுத்திரத் தலைகளை மோதாமலிருக்கும்படி செய். இருக்கட்டும், இவ்வளவும் உன்னுடைய சூழ்ச்சி யல்லவா? இவற்றை யெல்லாம் அழித்து, நானே அந்த ஸ்ரீதத்தராஜனுக்குப் பட்ட மகிஷியாகி, பாஞ்சால தேசத்துச் சக்ரவர்த்தினியுமாகி, உனது கர்வத்தை அடக்காவிட்டால் என் பெயர் லீலாவதியல்ல!—சுலோசனையின் மீது பொறாமைகொண்டு நான் இவ்வாறு செய்ய யத்தனிக்கவில்லை; இந்த பத்மாக்ஷியின் கர்வத்தை அடக்குவதற்கே நான் இவ்வாறு செய்யத் துணிந்தேன். நான்!— நான்! லீலாவதி பிரயத்னப்பட்டாள் ஒரு காரியம் ஆகாமற் போகுமோ? ஆஹா!—ஆயினும் நான் கால தாமதஞ் செய்யலாகாது. என்னுடைய எண்ணத்தைச் சீக்கிரம் நிறைவேற்றுவிட்டால் எல்லாம் கெட்டு விடும். இப்பொழுது நான் என்ன செய்யவேண்டும்? இந்த சுலோசனை—பெயரைப்பார் சுலோசனை!—இந்தச் சுலோசனை ஸ்ரீதத்தராஜனை மணம் புரியாதிருக்கச் செய்யவேண்டும் முதலில்; இவ்வளவுதானே? இது ஒரு கஷ்டமா எனக்கு? இப் பட்டணத்தினின்றும்—ஏன்! இவ்வுலகத்தினின்றும்—இவளை அனுப்பிவிட்டாற்போகிறது! அவளுடைய இஷ்டத்தின்படி ஒரு கணவனும் அவளுக்கு இவ்வுலகில் அகப்படான். ஆதலால் வேறுலகத்திற்குப் போய் அவள் வேண்டும்படியான கணவனைத் தேடட்டும்! ஆயினும்—ஐயோ பாவம்! அவள் எனக்கு நேராக ஒரு குற்றமுஞ் செய்யவில்லையே! இவளைக் கொல்லாமல் எங்கேயாவது ஒளித்து வைத்தால்,—சீ! சீ! இவ்வாறு அறை குறையாகச் செய்வதினுல்தான் காரியங்களெல்லாம் கெடுகின்றன.

> "மெய் வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
> எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
> அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
> கருமமே கண்ணாயி னார்"

செய்வன திருந்தச் செய்யவேண்டும். இல்லாவிட்டால் அக் காரியங்களிற் பிரவேசிக்கவே கூடாது. நாய் வேடம் பூண்டபின் குரைக்கமாட்டேனென்றால் ஆகுமா? அன்றியும், நான் இப் பெருஞ் சுகங்களை யெல்லாம் பெறுவதற்குத் தடையாக இவள் பிறந்திருப்பதை பார்க்கினும் வேறு எனக்கு என்ன குற்றஞ் செய்யவேண்டும்? சரி! இனி யோசிப்பதிற் பயனென்ன? சுலோசனை இறக்கவேண்டியதென்றால் அவள் இறக்கவேண்டியதுதான்! இன்னும் இரண்டு மூன்று தினங்களுக்குள் எல்லோரும் பாஞ்சால தேசத்திற்குப் புறப்படப் போகிறார்களாம்.—அதை நான் பார்க்கிறேன்!—ஆகவே எப்படியாவது—ஐயோ பாவம்! சுலோசனையை நாளைத் தினத்திற்குள் மேலுலகத்திற் கனுப்ப வேண்டும்—சீ! நான் எவ்வளவு கொடியவளா யிருந்தபோதிலும் என் தங்கையை என் கையாற் கொல்ல மனமெழாது. அவள் என்னை எவ்வளவு நம்பி யிருக்கிறாள்! இந்தச் சங்கடத்திற்கு என்ன செய்வது? என்மீது பழி சாற்றப்படாதிருக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டும்.— ஆம்! இதுவே நல்ல யோசனை!—

ஒரு தோழி வருகிறாள்.

தோ. அம்மா காந்திமதி தேவி உம்மை அழைத்துவரச் சொன்னார்கள்; நந்தவனத்தி லிருக்கிறார்கள்.

லீ. இதோ வந்து விட்டதாகச் சொல். போகும்போது வழியிலே தந்தவக்கிரன் இருந்தால் நான் அழைப்பதாகச் சொல்.

தோ. அப்படியே—இதோ வருகிறானே தந்தவக்கிரன்!

தந்தவக்கிரன் வருகிறான்.

லீ. சரிதான், நீ போ. [தோழி போகிறாள்.]
தந்தவக்கிரா, துன்மதி எங்கே?

த. அவன் வீட்டிலிருக்கிறான், இன்றைக்கு அரண்மனைச் சேவகம் என் முறை.

லீ. உங்களிருவருக்கும் நாளைத்தினம் சாயங்காலம் இறப்பதற்கு இஷ்டமா யிருக்கிறதா, அல்லது ஆயிரம் பொன் பெற இஷ்டமா யிருக்கிறதா ?

த. அம்மணி !

லீ. கூச்சலிடாதே ! மஹாராஜாவிடம் போய் முன்பு நீங்களிருக்கும் வேலையிலிருந்த காலநேமி இறந்ததற்குக் காரணத்தைக் கூறவா, அல்லது நான் சொல்லுகிறபடி செய்கிறீர்களா ?

த. [லீலாவதியின் காலில் வீழ்ந்து] அம்மணி ! அம்மணி ! எங்களுடைய உயிர் உங்களுடைய கையி லிருக்கிறது. இத்தனைக் காலம் எங்களைக் காப்பாற்றிய தாங்கள் இன்னுங் கொஞ்ச காலங் காப்பாற்றலாகாதா ? தாயே ! எங்கள்மீ தருள் புரியவேண்டும். தாங்கள் எதைச் செய்யச் சொன்னாலும் செய்யச் சித்தமா யிருக்கிறோம்.

லீ. சரி ! உங்களுடைய உயிரைப் பார்த்துக் கொள்ளுங்கள். நான் சொல்லப் போகிறதைக் கவனமாய்க் கேள் ; ஏதாவது குறுக்கே ஒரு வார்த்தையாவது பேசுவாயாயின், தெரியுமே உனக் கென்ன கதி யென்று ?

[தந்தவக்கிரன் தலையை அசைக்கிறான்.]

சரி, கவனமாய்க் கேள். இன்றைத்தினம் இரவு பன்னிரண்டு மணிக்கு, நீயும் துன்மதியும் சுலோசனையினுடைய படுக்கை யறையின் கதவு ஓரமாக வந்திருக்க வேண்டும். அப்பொழுது—

[மூன்றுதரம் கையை நொடிக்கிறாள்.]

இப்படி மூன்று சப்தம் கேட்டவுடனே, நீங்களிருவரும் கதவை மெல்லத் திறந்துகொண்டு உள்ளே சென்று, படுக்கையின்மீது மயக்கமாய் உறங்கிக்கொண்டிருக்கும் சுலோசனையை அப்படியே அசையாமல் எடுத்து நீங்கள் வெளியே செல்லவேண்டும். முன்பாக உங்க

ளுக்காக நான் கதவைத் திறந்து வைக்கிறேன்.—உம்! ஜாக்கிரதை! பேசாதே—இரண்டு மணி வரையில் அவள் மயக்கம் நீங்கமாட்டாள். அதற்குள்ளாக அப்படியே அருகிலுள்ள நரியங்காட்டில்— அவளை— கொன்று புதைத்துவிடவேண்டும்.—உம்! உம்! ஜாக்கிரதை! மறு நாள் உதயத்திற் கெல்லாம் அவளைக் கொன்றதற்கு அறி குறியாக ஏதாவது எனக்குக் கொண்டு வருவீர்களாயின் உங்க ளிருவருக்கும் ஆயிரம் பொன் தருவேன். நீங்கள் ஒன்றுக்கும் பயப்படவேண்டாம்; சுலோசனையினுடைய அறையில் அவள் தாதிகள் ஒருவரும் இன்றைத்தினம் படுத் துறங்காதபடி நான் செய்கிறேன். அரண்மனை மேற்குக் கோபுர வாயிலிலும் ஒரு சேவகனும் இருக்க மாட்டான். உங்களை ஒருவரும் காணாதபடி நான் செய் கிறேன். ஜாக்கிரதை! நான் கூறியதில் சிறிதேனும் தவறுவீராயினும், அல்லது நான் கூறியதில் ஒரு வார்த் தையாவது நீயாவது துன்மதியாவது வெளியிடுவீராயி னும், அந்த க்ஷணமே உங்களுடைய தலை வேறு உடல் வேறு என்று உறுதியாக நம்புங்கள். நான் இப்பொ ழுது கூறியதை யெல்லாம் துன்மதிக்குச் சொல். உங்க ளுடைய உயிரின்மீது உங்களுக்கு ஆசை யிருக்குமாயின் நான் கூறியதைச் செய்யுங்கள். போ; புத்திசாலிகளா யிருந்தால் பொன்னைப் பெறுவீர்கள், இல்லாவிட்டால் சுவர்க்கம் புகுவீர்கள்.

[தந்தவக்கிரன் போகிறான். நந்தவனத்தி னின்றும் காந்திமதி லீலாவதியை அழைக் கிறாள்.]

இதோ வந்து விட்டே னம்மா!—நாளைத்தினம் இந் நேரம் சுலோசனையோ அல்லது லீலாவதியோ சக்ரவர்த் தினியாவ தென்று தெரிந்துவிடும். [போகிறாள்.]

காட்சி முடிகிறது.



## இரண்டாவது காட்சி

இடம்—பராக்கிரமகேதுவின் அரண்மனையின் அந்தப்புரத்தில் ஒரு சயனக்கிருகம். காலம்—நரோத்திரி.

சுலோசனை ஒரு பஞ்சணையின்மீது உட்கார்ந்திருக்கிருள்.

பராக்கிரமகேதுவும் காந்திமதியும் அவள் அருகில் உட்கார்ந்திருக்கின்றனர்.

லீலாவதி ஒருபுறமாக உலாவிக்கொண்டிருக்கிருள்.

பரா. சுலோசனு, நான் கூறியதெல்லாம் நன்ருய் ஞாபகத்திலிருக்கட்டும்; உனக்கு விவாகமாகியபின், உனது தந்தை தாயர் வாசவதத்தராஜனும் சித்திரரேகாதேவியுமே. இதுவரையில் எங்களிடம் எப்படி நடந்து வந்தனையோ, அப்படியே அவர்களிடம் நீ பய பக்தியுடன் நடந்து வர வேண்டும். உனக்குக் கலியாணமானபின் கணவனையே தெய்வமென்று கொண்டு, அவருக்கு எப்பொழுதுங் கீழ்ப்படிந்து, அவருடைய நலத்தையே எப்பொழுதும் நாடி, அவர் மெச்சிக்கொண்டு உன்மீதில் காதல் குன்ருதிருக்கும்படி நீ நடந்து கொள்ளவேண்டும். இதை ஒரு காலும் மறவாதே—நீ என்ன செய்தபோதிலும், பிறந்த வீட்டிற்கும் புகுந்த வீட்டிற்கும் ஒரு கெட்ட பெயர் வராமல் நடந்துகொள். உன் கணவன் மெச்சிக்கொள்ளும்படியான நல்ல பதிவிரதையென்று பெயரெடுத்து, எந்த உன்னத ஸ்திதியிலிருந்த போதிலும் உனது உற்ருர் உறவினரை மறவாமல், உலகத்தாருக்கு ஒரு தாய் போலிருந்து, எளியவர்களைக் காப்பாற்றி, எல்லோரும், உலகிற் பெண்ணுகப்பிறந்தால் இப்படி யல்லவோ பிறக்க வேண்டும்! இம் மாத சிரோமணியை மகளாகப் பெற்றெடுத்தவனும், மனைவியாக அடைந்தவனும், என்ன பாக்கியஞ் செய்தார்களோ என்னும் பெயரை, நீ கொண்டு வரவேண்டும். பெண்மணி, உன்னைப்போன்ற புத்திசாலிகளுக்கு நான் வேறென்ன சொல்லவேண்டும்? அவ்வளவே.

கா. கண்ணே, சுலோசனா, உனது தகப்பனார் கூறிய புத்தியை விட வேறென்ன நான் கூறப்போகிறேன்? உன் மாமியார் முதலியவர்கள் சொற்படி நடந்து நல்ல பெண்ணென்று பெயரெடுத்துக் கொள். எப்பொழுதும் உன் கணவன் சொற்படிநட. அவர் என்ன கடிந்துகொண்டபோதிலும், நீ உன் மனங் கோணாது நல்ல பதிவிரதையா யிருந்து அவருடைய நன்மையையே நாடு.

"தற்காத்துத் தற்கொண்டார் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்."

அவர் வேறு மனைவிகளைக் கலியாணஞ் செய்துகொண்டு அவர்கள்மீதிலேயே காதல்கொண் டிருந்தபோதிலும் அவருக்குக் கோபம் வரும்படி ஒரு தொழிலையும் செய்யாதே, தெரியுமா?

சு. அம்மா, நீங்களும் பிதாவும் கூறியதையெல்லாம் நான் நன்றாய் ஞாபகத்தில் வைத்து அப்படியே நடந்து வருவேன். என்னைக் குறித்து நீங்கள் கவலைப்படவேண்டாம்.

கா. சுலோசனா, சித்திரரேகாதேவி ஸ்ரீதத்தனுக்கு மாற்றாந் தாய். ஆதலால் உனது மாமியார் உனக்கு என்ன கொடுமை செய்தபோதிலும் பொறுத்துக்கொண் டிரு; உன் கணவனிடம் முறையிடாதே, அப்படி உன்னாற் பொறுக்க முடியாமற்போனால், பத்மாக்ஷி நல்ல பெண், அவளிடஞ் சொல்; அவள் எல்லாவற்றையும் சரிப் படுத்திவிடுவாள்.

பா. காந்திமதி! பார்த்தாயா? பெண் புத்தியைக் காட்டிவிட்டாயே! உலகத்திலுள்ள மாமிமார்க ளெல்லோரும், மாற்றாந் தாய்க ளெல்லோரும், கொடியவர்களென்று தீர்மானித்து விட்டாயே! சுலோசனா, அப்படி ஒன்று மிராதம்மா; உனது மாமியார் உன்மீது மிகவும் அன்பாகவே இருப்பார்கள், பயப்படாதே.

கா. லீலாவதி,—லீலாவதி, சுலோசனைக்குக் கூறியது உனக்குங் கூறியதாகும். நீயும் நாங்கள் சொன்னதையெல்லாம் ஞாபகத்தில் வைத்திரு.

லீ. ஆஹா, அதற்கென்ன, அப்படியே.

பரா. காந்திமதி, நாம் போவோம் வா, நேரமாய்விட்டது.

கா. கண்ணே, சுகமாய்க் கண்வளர்.

[சுலோசனைக்கு முத்தமிடுகிறாள்.]

உன் கணவனுக்குத் தக்க பெண்ஜாதியாயிருப்பாயாக!

[பராக்கிரமகேதுவும் காந்திமதியும் போகிறார்கள். சுலோசனை மஞ்சத்தின்மீது சாய்ந்துகொள்ளுகிறாள்.]

லீ. அடி சுலோசனா, நானும் போய் வருகிறேன்; ஸ்ரீதத்த ராஜனைச் சீக்கிரம் மணந்து அவருடன் சுகமாய் நீடூழி காலம் வாழ்வாயாக!

[சுலோசனைக்கு முத்தமிடுகிறாள். முத்தமிடும்பொழுது தான் இடது கையில் ஒளித்து வைத்திருந்த ஒரு மருந்தை அருகில் வைத்திருக்கும் பாலில் போட்டுவிடுகிறாள்.]

அப்படி வாழும்பொழுது எங்களையெல்லாம் மறவாதே.

சு. இல்லை, இல்லை. அக்காள், அதென்ன அப்படிச் சொல்லுகிறாயே? [லீலாவதி போகிறாள்.]

இன்றிரவு ஏதோ எனக்கு ஒருவிதமாகப் பயமாயிருக்கிறது. என்ன என் மனம் இவ்வாறு ஒரு காரணமுமின்றிக் கலங்குகிறதே!—எனக்கு ஏதோ ஒரு பெருந் தீங்கு இன்றிரவு நேரிடும்போல் தோன்றுகிறது. என்ன ஆச்சரியம்! எனக் கென்ன தீங்கு நேரிடப்போகிறது? எல்லாம் சுவாமியினுடைய கருணை. இப் பாலை அருந்தி, இவ் விளக்கைக் குளிர்வித்துவிட்டு உறங்குகிறேன்.

[அருகில் வைத்திருக்கும் பாலைக் குடித்து, விளக்கைக் குளிரச்செய்து, மஞ்சத்தின் மீது படுத்துக்கொள்ளுகிறாள்.]

"நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுஞ் சண்முக மும்பன்னிரு
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே."

ஜெகதீசனே! ரக்ஷிப்பாயாக!—ஏன் நித்திரை வரவில்லை?—என்ன எனக்கு ஒருவாறாக இருக்கிறதே! என் தலை சுழல்கிறது! வயிற்றில் என்னமோ எரிகிறதே! அக்காளைக் கூப்பிடவா? அம்மா!—ஈசனே!—

[சுலோசனை மயக்கமாய்விடுகிறாள். சிறிது பொழுது கழித்து லீலாவதி பக்கத்திலுள்ள ஒரு கதவை மெல்லத் திறந்துகொண்டு உள்ளே வந்து, சுலோசனை அருகிற் சந்தடி செய்யாமற் சென்று, அவள் நன்றாய் மயக்கமா யிருப்பதைக் கண்டறிந்த பின், கை விரலினால் மூன்றுதரம் நொடிக்கிறாள். உடனே வேறொரு கதவை மெல்லத் திறந்துகொண்டு தந்தவக்கிரனும் துன்மதியும் சந்தடி செய்யாமல் உள்ளே நுழைகிறார்கள். லீலாவதி அவர்களுக்குக் கையினால் சைகை செய்ய, அவர்கள் அப்படியே சுலோசனையை மஞ்சத்துடன் வெளியில் எடுத்துச் செல்கிறார்கள்.]

லீ. [தனக்குள்] சரி, நம்முடைய காரியம் நிறைவேறிவிட்டது, இனி நாம் பயப்படவேண்டியதில்லை. இவர்களை ஒருவரும் கண்டு பிடிக்கமாட்டார்கள். மேற்கு கோபுர வாயிலிலுள்ள சேவகர்களையும் போக்குச் சொல்லி அனுப்பிவிட்டோமே,—இனி நாம் இங்கிருக்க லாகாது.—ஐயோ, சுலோசனா! உன்னை நான் கடைசிமுறை கண்டேன், உன் விதி இது! [போகிறாள்.]

காட்சி முடிகிறது.



# இரண்டாவது அங்கம்

---

## முதல் காட்சி

இடம்—ஓர் அடர்ந்த கானகம் காலம்—வைகறை.

பிரதாபசீலர் வருகிறார்.

பிர. [தனக்குள்] வழக்கப்படி யோகாப்பியாசஞ் செய்ய இன்றைத்தினம் இக் காட்டிற்கு வந்திருக்கிறார்போலும் இளவரசர். இதுதான் நமக்கு நல்ல சமயம். இங்கு நான் இவரைக் கொல்வேனாகில் யார் என்னைக் கண்டுபிடிக்கப் போகிறார்கள்? அவர் இறந்ததே யாருக்குத் தெரியப் போகிறது? அவர் சுற்றி வரும் அனேக காடுகளில் இது வொன்று. இங்கு யார் வந்து அவரைத் தேடப் போகிறார்கள்? ஆயினும் எனக்குப் பயமாகவே இருக்கிறது. ஒருவேளை இது வெளியாகிவிடுமாயின் பிறகு என் கதி என்னவாகும்?—என்ன சங்கடம்! இந்த விவாக சமாசாரம் ஒன்று நடுவில் வந்திராவிட்டால், ஆகிறது ஆகின்றது பார்த்துக் கொள்ளுவோம் என்று சும்மா இருந்திருப்பேன். இதுவன்றோ நடுவில் வந்து என் ஏற்பாடுகளை யெல்லாம் கெடுத்தது; ஆயினும் துணிந்து விட்டபின் இப்பொழுது யோசிப்பானேன்?

"எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு."

எங்கே இளவரசர்? இங்கேதான் வந்தாற்போ லிருக்கிறது; இதற்குள்ளாக எங்கேயோ காணோமே,—அதோ போகிறார்! நான் மறைந்திருந்தே எனது பாணத்தை எய்யவேண்டும்; ஒருவேளை தவறினும் தவறும்; தவறினல் அவர் கண்முன் எதிர்ப்படுவேனாயின் நானிறக்க வேண்டியதுதான். யோகாப்பியாசஞ் செய்து தேகம் குன்றியபோதிலும் பலம் மாத்திரம் குன்றவில்லை. யோகியா யிருந்தும் சில வேளைகளிற் கோபம் அதிகமாக மூள

கிறது இவருக்கு; நான் சித்தமாகவே இருக்கவேண்டும்.— [ஓர் அம்பைத் தனுசிலே தொடுத்து]
அம்பே! நீ இன்று எனக்கு உதவி செய்வாயாகில் நான் ஒரு பெரும் ராஜ்யத்தைப் பெற்றவனுவேன். [போகிருர்.]

காட்சி முடிகிறது.

## இரண்டாவது காட்சி

இடம்—காட்டில் ஓர் அடர்ந்த புதர். காலம்—காலை.

சுலோசனே மெல்ல மயக்கம் தெளிந்து எழுந்திருக்கிருள்.

சு. ஆ! இது என்ன?— நான் எங்கே யிருக்கிறேன்? கனவு காண்கிறேனே என்ன? அக்காள்! லீலாவதி!— ஐயோ! நான் விழித்துக்கொண்டுதானே இருக்கிறேன்! இந்தக் காட்டில் நான் எப்படி வந்தேன்? ஐயோ! காட்டிற் புலி கரடி முதலிய மிருகங்க ளிருக்குமே!— இதென்ன என் படுக்கையுடன் யாரோ என்னே இங்கே தூக்கிக்கொண்டு வந்திருக்கிருர்கள்போ லிருக்கிறதே! —நான் எப்படி அரண்மனேக்குப் போவது? ஐயோ! அம்மா முதலியவர்க ளெல்லோரும் என்னேத் தேடுவார்களே,—என் நா உலருகிறது,— இங்கே என்னமோ எழுதி யிருக்கிறது மண்ணில்! படித்துப் பார்ப்போம்;— [வாசிக்கிருள்.]
"நீங்கள் இன்னுரென்று யாருக்காகிலும் வெளியிட்டாலும் அல்லது ஹஸ்தினுபுரத்திற்குத் திரும்பி வந்தாலும் உடனே உயி ரிழக்க வேண்டிவரும்"—ஐயோ! இதென்ன? நானிறக்க வேண்டுமோ?-அப்புறம் என்ன எழுதி யிருக்கிறது பார்ப்போம்,—"வேண்டிவரும்—ஆதலால்"—என்ன அப்புறம் ஒன்றையுங் காணுேமே? இதை யாரெழுதின திங்கே? நானெப்படி இங்கு வந்தேன்?— ஐயோ எனக்கு மிகவும் பயமா யிருக்கிறது; என்

னுடைய பெயரை நான் ஒருவரிடமும் வெளியிட லாகாது ; வெளியிட்டால் உயிர் போய்விடும் நான் என்ன செய்வது ?—ஆ ! அதென்ன சப்தம் ? யாரோ இந்த வழி வருகிறாற்போ லிருக்கிறது.—

சாரங்கன் வருகிறான்.

சா. ஐயோ, எழவு ! இந்தக் காட்லே வந்து ஆப்டுகுனே னே ! இருட்டாவரத்துக்குள்ளோ வூட்டுக்குப் போவா தப் போனா தொடப்பக்கட்டெ அடிதான்.— இங்கே எழவு புலி கிலி—அடே, அது யாரது ? பொம்மனாட்டி யாட்டம் இர்க்குதே ! யாரம்மா அது, யாரு ?—என்ன, வேறொர்த்தரையுங் காணோமே,—நல்ல அழகா யிருக்கி றாடா இவ !—யாரம்மா ? என்ன ஒண்டிமா இர்க்கறே ?

சு. ஐயா, நானொரு ராஜ—நான் இன்னா ளென்று சொல்லக் கூடாது.—ஐயோ ! என் நா உலர்ந்துபோகிறது ; கொஞ் சம் தண்ணீர் வேண்டும், எங்கே கிடைக்கும் ?

சா. ஓகோ ! அப்படியா சமாசாரம் ; சரி, தெரிஞ்சிக்கி னேன்,—நல்ல வேளைதான் நமக் கின்னைக்கி,—அதெல் லாம் இருக்கட்டும் ; நீ யாரு ? நிஜெத்தெச் சொல்லு. இங்கே என்னமாவந்தே ? நீ ஒண்டிமாவந்தியா, கூட யாரானும் வந்தாங்களா ?

சு. ஐயா, நானிங்கே எப்படி வந்தேனென்று தெரியாது எனக்கு.

சா. என்ன ரொம்ப ஒலக்கடமா யிருக்குது— [தனக்குள்] நம்ப சமுதெ முண்டெக்கானா இவ நன்னா யிருக்கிறா, கிட்டப்போய்ப் பார்ப்போம்.—உம்பே ரென்னடி ?

சு. துஷ்டா, என்னை அடி என்கிறாயா நீ ?

சா. அவ்வளவு கோவிச்கிக்கவாணாம், நான் சொல்லரத்தெக் கேளு. என்னோடெகூட வந்தூடு நீ ; உனக்கு சாப்பாடு போடறேன். [அருகிற் செல்லுகிறான்.]

சு. சிச்சி! துஷ்டக் கழுதையே, வாயை மூடு; என்னருகில் வராதே.—ஐயோ! ஐயோ! இங் கொருவரு மில்லையோ?

ஸ்ரீதத்தர் வருகிறார்.

ஸ்ரீ. [தனக்குள்] பிரக்யானம் பிரம்மம்.

சு. சாமி, யோகியாரே! இந்தத் துஷ்டன் என்னைக் கெடுக்கப் பார்க்கிறான். இவனைத் துரத்திவிடுங்கள்.

சா. ஏ! சன்யாசி! உனக் கென்னா இங்கே வேலே? போ.

ஸ்ரீ. [தனக்குள்] ஆம், நமக் கென்ன? [போக முயல்கிறார்.]

சு. சாமி! சாமி! இப் பாதகன் கையில் என்னை விட்டுவிட்டுப் போகாதீர்!—தொடாதேயடா பாவி!

[கண்ணீர்விட் டழுகிறாள். சாரங்கன் சுலோசனையி னுடைய கரத்தைப் பற்ற முயலுகிறான். உடனே ஸ்ரீதத்தர் அவனுடைய இருகரங்களையும் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளுகிறார்.]

ஸ்ரீ. ஏ! பிரித்வி! ஏன் நீ இம் மண்ணை வருத்துகிறாய்?

சா. ஏ! நீ யார்வோய்? பிரித்வியும் மண்ணும்? எம் பெண்டாட்டியெ தொட்டா உனக் கென்னா? விடுவோய் கையே.

சு. சாமி, இப் பாதகன் பொய் பேசுகிறான். என்னைப் பெண்டாளப் பார்க்கிறான்.

[தன் முகத்தை முன்தானையால் மூடிக் கொண்டு தேம்பி அழுகிறாள்.]

ஸ்ரீ. மூடாத்மா! இச் சிற்றின்பத்தில் என்ன இருக்கிறது? இம் மாயையாகிய உலகை வெறுத்து பேரின்பத்தை நாடி மெய்ப் பொருளாகிய பிரம்மத்துடன் கலக்க விரும்பு.

சா. இந்தக் கதெயெல்லாம் உன்னெ யார் கேட்டது வோய்? உன் வேலெயெ பாத்துக்கினு போ, உடுவே கையே!

ஸ்ரீ. நான் சொல்வதைக் கேட்கமாட்டாய் நீ!

[சாரங்கன் ஸ்ரீதத்தர் கையினின்றும் திமிறிக்கொண்டு, மறுபடியும் சுலோசனையினுடைய கரத்தைப் பற்றப் பார்க்கிறான். ஸ்ரீதத்தருக்குக் கோப மூண்டு சாரங்கனைப் புடைத்துக் கீழே தள்ளுகிறார். இத்தருணத்திற் செடி மறைவாய்த் தூரத்தில் வந்திருந்த பிரதாபசீலர் ஓர் அம்பை எய்ய, அது ஸ்ரீதத்தர்மீது படாது சாரங்கன்மீது வீழ்ந்து சாரங்கன் இறக்கிறான்.]

"ஆசையும் பாசமு மன்பு மகத்தடக்கிப்
பூசிப் பொலிந்த புலாலுடம்—பூசற்
கயிறற்றாற் போலக் கிடக்குமே கூற்றந்
தெயிறுற் றிடை முறிந்தக் கால்."

மண்ணே! மண்ணுடன் சேர்!

சு. [ஸ்ரீதத்தரைக் கடைக் கண்ணாற் பார்த்துக்கொண்டு தனக்குள்] இவரைப் பார்த்தால் ராஜ குமாரனைப்போல் தோன்றுகிறது. சக்ரவர்த்தியினுடைய லக்ஷணங்களெல்லாம் இவரிட மிருக்கிறது. இவர் ஏன் இப்படி யோகியாயிருக்கிறார்?

[ஸ்ரீதத்தர் அவ்விடத்தை விட்டுப் போகப் பார்க்கிறார்.]

ஐயா! சாமி! இவ் வடர்ந்த கானகத்தில் நீர் என்னைத் தனியாக விட்டுச் செல்லுகிறீரே!

ஸ்ரீ. இது யார்!

[சுலோசனையைப் பார்த்துவிட்டு உடனே தலையைத் திருப்பிக்கொண்டு கையினால் கண்ணை மூடிக் கொள்கிறார்.]

அந்தோ! இங்கொரு யமன் வந்திருக்கிறதே!

சு. ராஜ குமாரா—சாமி! யோகியாரே! எனக்கு மிகவும் நா வுலருகிறது. நான் அருந்தத் தண்ணீர் வேண்டும். கொஞ்சம் என்மீது கருணை புரிந்து தண்ணீரிருக்கும் இடத்தைக் காண்பிக்கவேண்டும்.

ஸ்ரீ. யமனே! என்னை ஏன் கேட்கிறாய்? சிவபோகமெனும் பேரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய்க்

கிடக்கிறது, வாரி உண் போ.

[மறுபடியும்போகப் பார்க்கிறார்.]

சு. ஐயோ ! இக் காட்டில் நான் எங்கென்று தண்ணீர் தேடு வேன் ? சாமி ! என்னைத் தனிமையாக விட்டுப் போதல் முறையோ ? யோகிகளுக்கு முக்கியமாக ஜீவகாருண்யம் இருக்கவேண்டு மென்கிறார்களே, இதுவோ உமது ஜீவ காருண்யம் ?

ஸ்ரீ. இதென்ன பெரிய யமனு யிருக்கிறது, நமக்கே புத்தி சொல்ல வருகிறது !—பெண் பேயே, என்ன வேண்டும் உனக்கு ?

சு. நான் அருந்தத் தண்ணீர் வேண்டும்,—பிறகு இக் காட் டைவிட்டு ஏதாவது ஒரு பட்டணத்திற்குக் கொண்டு போய் விடுவீராயின் உமக்குப் புண்ணிய முண்டு.

ஸ்ரீ. இதென்ன பிராரப்தமா யிருக்கிறது !—பெண் பேயே ! நான் சொல்வதைக் கேள். நீ பட்டணத்திற்குப் போய் என்ன செய்யப் போகிறாய் ? இங்கேயே தவஞ் செய்து உன் காலத்தைக் கழித்துவிடு.

சு. சாமி, யோகியாரே, எனக் கென்ன தவஞ் செய்யத் தெரி யும் ? ஐயோ ! என்மீது கருணை புரிந்து ஏதாவது ஒரு பட்டணத்திற்கு என்னைக் கொண்டு போய்விடும் ; உமக் கு உற்றார் உறவினர் ஒருவரு மில்லையா ? அவர்களில் யாருக்காகிலும் வேலை செய்து என்னுடைய வாழ்நாட் களைக் கழித்து விடுகிறேன். துறவிகளுக்கு ஜீவகாருண் யம் முக்கியமாக இருக்கவேண்டுமே, இதுவோ உமது ஜீவகாருண்யம் ?

ஸ்ரீ. சீ, மூடாத்மா ! என்னுடைய பேச்சைக் கேட்கமாட் டே னென்கிறா யல்லவா ? உனக்குத் தக்க சிக்ஷை செய் துவைக்கவேண்டும். ஆனால் வா என் பின்னாக. என் மாற்றாந்தாயிடம் உன்னை ஒப்புவித்து நன்றாக வேலை வாங்கும்படி செய்கிறேன் பார்.

சு. சாமி, எல்லாம் உம்முடைய கருணை.

ஸ்ரீ. தோற்பையே! என் னருகில் நெருங்காதே; இதோ இக் கொடியின் முனையைப் பிடித்துக்கொள்; இந்த தூரத் திற்குள்ளாக என் னருகில் வந்தால் உன்னை இப்படியே விட்டுவிட்டுப் போய்விடுவேன்.

[அங்குள்ள ஒரு கொடியை அறுத்து ஒரு முனையைத் தான் பிடித்துக்கொண்டு மற் றொரு முனையைச் சுலோசனைக்குக் கொடு க்கிருர்.]

சு. [தனக்குள்] ஐயோ! இதென்ன ஆச்சரியம்! இவரைப் பார்த்தால் மதனனைப்போ லிருக்கிருர், புத்தி மாத்திரம் இப்படிச் சபலித் திருக்கிறதே! [போகிருர்கள்.]

காட்சி முடிகிறது.

---

## மூன்ருவது காட்சி

இடம்—வாசவதத்தராஜனுடைய அரண்மனை நந்தவனம்.
காலம்—மாலை.

சுலோசனை வருகிருள்.

சு. [தனிமொழி] என்னுடைய பெயரை நான் வெளியிட்டால் என துயிர் போய்விடும்.—ஏன் நான் இன்னுளென்று வெளியிட வேண்டும் இப்பொழுது? ராஜ குமாரியாகப் பிறந்தும் ஒரு பாங்கியின் தொழிலைப் புரியும்படி நேரிட் டது உண்மையே; அவ்வளவுதான், வேறென்ன குறை யிருக்கிறது? சித்திரரேகாதேவி என்னைத் தனது பெண் போலவே பாவித்து என்னிடம் மிகவும் அன்புகொண் டிருக்கிருர்கள். நான் இவ்விடத்திலேயே எனது வாழ் நாட்களை ஒரு பாங்கியாகவே கழித்துவிட்டால் என்ன கெட்டுப்போகிறது? எல்லாம் விதியின்படி யாகிறது. ஆயினும் ஹஸ்தினபுரத்தில் என்னைக் காணேமென்று எங்கெங்கும் தேடி எனது தந்தை தாயர் துயரப் படு வார்களே யென்று மாத்திரம் வருத்தமா யிருக்கிறது. ஐயோ, லீலாவதி என்னைக் காணேமென்று என்ன வருத்

தம் அடைவாள்! பத்மாக்ஷியும் துக்கப்படுவாள். நான் எங்கேயோ ஓடிப்போய் விட்டேனென்று நினைப்பார்களோ? அல்லது நான் இறந்துவிட்டேனென்று நினைப் பார்களோ?—நாம் என்ன செய்யலாம்? எல்லாம் தெய் வம் ஆக்கியாபித்தபடி யாகிறது. ஆயினும் எனக்குத் தெய்வம் விதித்தபடி வேறொருக்கும் விதித்திராது; இல்லாவிட்டால் ஸ்ரீதத்தராஜனுக்கு வாழ்க்கைப்படத் தீர்மானிக்கப்பட்ட நான், அவருடைய அரண்மனையிலே யே ஓர் அற்பப் பாங்கியா யிருக்க நேரிட் டிருக்குமா? இந்த ராஜ குமாரருக்குத்தானே என்னை விவாகஞ் செய்து கொடுப்பதாகப் பிதா தீர்மானித்தார்! இவர் யோகியா யிருக்கிறாரே, இவருக்கு விவாக மென்னத் திற்கு? ஏதோ மனோ வியாகூலங்கொண் டிருப்பதாகச் சொன்னார்களே, இதுதானோ அம் மனோ வியாகூலம்? ஐயோ! இவருக்கு எல்லாச் செல்வங்களையும் கொடுத்த ஈசன் இவரது புத்தியை மாத்திரம் ஏன் இவ்வாறு சப லித்துவிட்டார்? இவர் அன்றைத்தினம் அக் காட்டில் என்னிடம் பேசியது ஒன்றும் எனக்கு அர்த்தமாக வில்லை. எப்பொழுதும் இப்படியாகத்தான் இருக்கிறா ரோ? ஆஹா! இவரைப் பார்க்கிலும் வடிவழகுள்ள புரு ஷனை இனிப் பிரமன் இவ் வுலகிற் சிருஷ்டிக்கப் போகி றானோ?—நா னிப்பொழுது இதைப்பற்றி யோசித்தல் முறையோ? அவரோ சக்ரவர்த்தியின் மகன்; நானோ— ஓர் அற்பப் பாங்கி; ஆயினும் இவரைத் தனது நாயக னாகப் பெற்று இவருடன் கூடி இன்ப நலத்தை அனு பவிக்கப் போகிறவள் என்ன பாக்கியம் பண்ணி இருக்க வேண்டும்! பெண்ணாகப் பிறந்தால் அவளைப்போற் பிறக் கவேண்டும்; என்னைப்போல் ராஜ குமாரியாகப் பிறந் தும், உள்ளதும்போய்ப் பாங்கியாய்க் கிடப்பதில் என்ன பிரயோஜனம்?

[சித்திரரேகாதேவி 'சாவித்திரி, எங்கிருக்கி றாய்' என்று அந்தப் புரத்திலிருந்து அழைக்கிறாள்.]

இதோ வந்துவிட்டேனம்மா.

[சரேலென்று எழுந்து போகிருள். போகும் சருணத்தில் அவள் கையிலிருந்த ஒரு வளை கழன்று கீழே விழுந்துவிடுகிறது.]

மற்ருெருபுறமிருந்து பிரதாபசீலரும் விசித்திரசர்மனும் வருகிருர்கள்.

விசி. ஐயா, பிரதாபசீலரே, நீர் இங்கேதானே சற்றிரும். நான் போய் மெல்ல இளவரசரை இங்கு அழைத்து வருகிறேன்; நாமிருவருமாகக் கூடி ஏதோ வேதாந்த விஷயமாகப் பேசுவதுபோல அவருடன பேசி, அவருடைய உண்மையான எண்ணத்தை அறிவோம்; என்ன சொல்லுகிறீர்?

பிர. இதிற் பிரயோஜன மில்லை ஐயா, ஆயினும் போய் அழைத்து வாரும் பார்ப்போம். [விசித்திரசர்மன் போகிருன்.] என்ன ஆச்சரியம்! என்னுடைய பாணம் பட்டுக் கீழே விழுந்ததைப் பார்த்தேனே, ஒருவேளை அப் பாணம் நன்ருய்ப் படவில்லையோ? அவர் வந்தவுடன் தேகத்தில் ஏதாவது காய மிருக்கிறதாவென்று பார்க்கவேண்டும். இல்லாவிட்டால், யோகாப்பியாசஞ் செய்வதினுல் இவருக்குப் பாணங்களால் ஒரு துன்பமும் நேரிடாதிருக்கிறதோ? என்னைப் பார்த்திருக்கக்கூடுமோ இவர்? வந்தவுடன் மெல்ல விசாரித் தறியவேண்டும். நான் கேட்பேனுயின் ஏதாவது ஒருவேளை என்மீது சந்தேகப்பட்டாலும் படுவார்; ஒன்றும் அதைப்பற்றிப் பேசாது ஊகித் தறியலாமா?—

ஸ்ரீதத்தர், விசித்திரசர்மன், விக்கிரமவீரன், வருகிருர்கள்.

பிர. வாரும் அரசே, இப்படி உட்காரும்.
[ஓர் ஆசனத்தைக் கொடுக்கிருர்.]

விசி. [வேருேர் ஆசனத்தைக் காட்டி] விக்கிரமவீரரே, தாங்களிப்படி உட்காரலாம்.

[அவர் உட்காரப் போகும்பொழுது ஆசனத்தை இழுத்துவிட, விக்கிரமவீரன் கீழே விழுகிருன்.]

ஐயா ! தாங்கள் கோபித்துக்கொள்ளக் கூடாது, இந்த ஆசனம் உமக்கு ஆதாரமோ, அல்லது நீர் இந்த ஆசனத்துக்கு ஆதாரமோ என்று பார்த்தேன் ; வேறொன்றுமில்லை ?

விக். ஆகட்டும் ! [கோபத்துடன் போகிறான்.]

பிர. ஆஹா ! என்றைக்கும் நகைக்காத இளவரசரே இன்று நகைத்துவிட்டாரே ! [தனக்குள்]
என்ன ஆச்சரியம்! தேகத்தில் ஒரு காயத்தையும் காணோமே, நான் ஏதோ மதிமோசம் போனேன்.

விக். அவருக்குச் சீக்கிரம் விவாகமாகப் போகிறதே, இப்பொழுதே நகைக்கக் கற்றுக்கொள்ள வேண்டாமா ?

[ஸ்ரீதத்தர் எழுந்து போக யத்தனிக்கிறார் ; அதை விதூஷகன் தடுக்கிறான்.]

யோகீஸ்வரரே, இதென்ன இது ? எல்லாந் துறந்த உமக்குக் கோப மிருக்கலாமா ? இதுவோ உம்முடைய துறவின் முறை ? வேண்டாம், உட்காரும்.

ஸ்ரீ. ஆம், நீ கூறிய துண்மையே, கோபம் கொடியது.

"கோபத்தாற் கௌசிகன் தவத்தைக் கொட்டினன்
கோபத்தா னகுடனும் கோல மாற்றினன்
கோபத்தா லிந்திரன் குலிசம் போக்கினன்
கோபத்தா லிறந்தவர் கோடி கோடியே"

[உட்காருகிறார்.]

விசி. அப்பா ! வாயைத் திறந்தாரையா !—இளவரசே, தங்களை நான் சில கேள்விகள் கேட்கவேண்டும் ; அதற்குத் தாங்கள் கோபித்துக் கொள்ளாமல் உத்தரவளிக்கும் பக்ஷத்திற் கேட்கிறேன்.

பிர. விளையாட வேண்டாம் ஏதாவது உண்மையிற் கேட்க வேண்டுமென்றாற் கேளும். ஏளனம் செய்யாதீர், பத்திரம்.

விசி. முதற் கேள்வி ; ஏன் இவ் வுலக இன்பத்தை யெல்லாம் வெறுத்ததுபோல் நடித்து வருகிறீர் ?

ஸ்ரீ. இவ்வுலகில் இனி நான் விரும்பத்தக்கது ஒன்று மில்லை.

பிர. ஆனல் இவ் வுலக இன்பத்தையெல்லாம் தாங்கள் அநுபவித்து வெறுத்திருக்கிறீர் போலும்?

ஸ்ரீ. அப்படி யல்ல; பேரின்பத்திற்கு முன்பாக இச் சிற்றின் பங்களெல்லாம் எவ்வளவு?

விசி. அந்தப் பேரின்பமென்பது என்ன?

ஸ்ரீ. "பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளை
பெருப்பேதை யறிவாளோ பேரா னந்தம்
உற்றவர்க்கே கண்ணீர்க்கம் பலையுண் டாகும்
உருதவரே கன்னெஞ்ச முடையா ராவார்"

என்று தாயுமானவர் கூறியதைக் கேட்டதில்லையோ?

விசி. ஆனல் அந்த இன்பத்தைத் தாங்கள் அநுபவித்திருக் கிருற்போ லிருக்கிறது?

ஸ்ரீ. அதைத்தான் அடைய முயலுகிறேன்.

விசி. இன்னுஞ் சிலகாலம் பொறுத்து அடைய முயல லாகா தோ?

ஸ்ரீ. "புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி
இன்னினியே செய்க வறவினை—இன்னினியே
நின்ரு னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்ரு னெனப்படுத லால்,"

நாளைத்தினம் இக் காயம் இருக்குமென்ப தென்ன உண் மை?

விசி. சரி; அப் பேரின்பத்தைப் பெறுவதற்குக் கலியாணம் வேண்டாமென்ருல் அது வந்துவிடும்போ லிருக்கிறது?

பிர. விதூஷகரே, நான் விளையாட வேண்டாமென்று முன்பே கூறினேனே!

விசி. இல்லை இல்லை! அப் பேரின்பத்தை எப்படிப் பெறுவது?

ஸ்ரீ. உன்னை நீ அறிந்தாற் பெறுவாய்.

விசி. என்னை நான் அறிவதாவது? ஒரு வேளை பைத்தியம் பிடித்தால் மறந்துவிடுவேன். என்னை எனக்குத் தெரி

யாதோ? நான்தான் விசித்திரசர்மன்; என்னை நான் அறிந்துகொண்டேன்; பேரின்பத்தையுங் காணோம் ஒன்றையுங் காணோமே?

ஸ்ரீ. நான்தான் விசித்திரசர்மன் என்றனையே? அந்த நான் என்பதெது?

விசி. நான் என்பதெதுவா?— இதோ நான்—இதோ நான்!

ஸ்ரீ. இவ் வுடலோ!

விசி. இவ்வுடலா?—ஆம், உடல்தானென வைத்துக் கொள்ளும்.

ஸ்ரீ. "எரியெனக் கென்னும் புழுவோ வெனக்கெனு மிந்தமண்ணுஞ்
சரியெனக் கென்னும் பருந்தோ வெனக்கென்னுந் தான்புசிக்க
நரியெனக் கென்னும்புன் ஞயெனக் கென்னுமிந் நாறுடலைப்
பிரிய முடன்வளர்த் தேனித ஞலென்ன பேறெனக்கே."

என்று திருவெண்காட்டடிகள் திருவாய் மலர்தருளியிருக்கிறதை மறந்தாயோ?

விசி. தீர்ந்தது; பிறகு எதுதான் நான் என்பது?

ஸ்ரீ. அதைத்தான் அறியவேண்டும்.

"தன்னையுந் தனக்கா தாரத் தலைவனை யுங்கண் டானேற்
பின்னையத் தலைவன் ருனுய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்
உன்னைநீ யறிவா யாகி லுனக்கொரு கேடு மில்லை
என்னைநீ கேட்கை-யாலே யீதுப தேசித் தேனே."

விசி. அதை நானறிந்தால் எனக்கும் பேரின்பம் வரும்போலிருக்கிறது.

ஸ்ரீ. ஆம், அந்த 'நான்' இறந்தாற் பேரின்பம் அடையலாம்.

விசி. இதென்ன இழவா யிருக்கிறது, நீர் இறந்தாலோ பேரின்ப மடையலாம்? கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டதாம்; போதும் உபதேசம்,—ஆயினும் இளவரசே, எனக்கொரு சந்தேக மிருக்கிறது?

ஸ்ரீ. என்ன?

விசி. தாங்கள் பேரின்பத்தை யடைய விரும்பியபோதிலும், ஏன் இவ்வுலகத்துடன் ஒத்து வாழ்ந்து, விவாகஞ்செய்து கொண்டு, நமது நாட்டைச் சில காலம் ஆண்டுகொண்டு சுகமா யிருந்து, இதற்குள்ளாக அப்பேரின்பத்தை யடையும் வழியை யறிந்து, பிறகு அப் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கக்கூடாது? இப்பொழுதே இப்படி யிருப்பானேன்?

குணசேனர் வருகிறார்.

குண. ஐயனே, மஹாராஜா அவர்களும் சித்திரரேகாதேவியும் தம்மைக் காண வருகிறார்கள். என்னை முன்பாகத் தம்மிடம் அனுப்பி வைத்தார்கள்.

ஸ்ரீ. என்ன விசேஷம் குணசேனா?

குண. ஐயனே, என் மீதில் கோபங் கொள்ளாதிருக்கும் பக்ஷத்திற் கூறுகிறேன்.

ஸ்ரீ. அப்பா, உன் மீது நான் ஏன் கோபங்கொள்ள வேண்டும்? சொல்.

குண. ஐயனே, உமக்கு விவாகம் செய்யத் தீர்மானித்திருக்கிறாற்போ லிருக்கிறது; அதைப்பற்றியே உம்முடன் பேச இதோ வருகிறார்கள்.

[ஸ்ரீதத்தர் திடுக்கிட் டெழுந்திருக்கிறார்.]

வாசவதத்தராஜனும், சித்திரரேகாதேவியும், கமலாகரரும் வருகிறார்கள்.

ஸ்ரீ. [தன் பிதாவின் காலில் வீழ்ந்து] ஐயனே! நீர் என்னைப் பெற்றெடுத்து வளர்த்த தந்தையாயின், நான் உம்மை ஒரு வரங் கேட்கிறேன், அதைத் தந்தருள வேண்டும்.

சித். ஸ்ரீதத்தா, என் கண்மணியே, உனக்கென்ன வேண்டுமென்றாலும் நான் உன் பிதாவைத் தரும்படியாகச் சொல்லுகிறேன் கேள். உன் வேண்டுகோளை மறுப்போமோ?

வா. அப்பா, அப்படியே; உனக்கு வேண்டியதை நான் கொடாமலிருப்பேனா? எழுந்திரு.

[கைகொடுத்து எழுந்திருக்கும்படி செய்கிறார்.]

ஸ்ரீ. ஐயனே, என்னை விவாகஞ்செய்து கொள்ளும்படி மாத்திரம் தாங்கள் எப்பொழுதும் கேட்கலாகாது. இதுவே நான் தங்களை வேண்டிக்கொள்வது.

வா. ஸ்ரீதத்தனுக்கு நான் விவாகத்தைப்பற்றிப் பேச வருகிறேனென்று யார் கூறியது?—குணசேனா! இது உன் வேலையோ?

குண. மஹாராஜா, நான் என்ன செய்வது? தாங்களிருவரும் ஏதோ பேச வருவதாகக் கூறினேன். என்னவென்று கேட்டார், அப்பொழுது நான் சொல்ல வேண்டியதாயிற்று.

சித். ஸ்ரீதத்தா! நீ வேறு என்னவோ கேட்கப்போகிறாயென்றல்லவோ இருந்தேன்; இதென்ன இப்படிக் கேட்டாயே?

வா. ஸ்ரீதத்தா! ஏனோ என் மகனாகப் பிறந்தாய் நீ? என் பழைய வம்சம் அற்றுப்போகவோ அதில் நீ ஜனித்தது? எனது மானத்தைக் கெடுப்பதற்கோ என் வயிற்றில் நீ உதித்தனை?—நான் ஹஸ்தினபுரத்து மன்னன் பராக்கிரமகேது ராஜனுடைய இரண்டு பெண்களில் ஒரு பெண்ணை உனக்கு விவாகஞ் செய்து கொள்வதாகக் கூறிப் பெண் பேசும்பொருட்டு ராயபாரியை அனுப்பினேன்; இதோ அப் பராக்கிரமகேது தன்னுடைய மூத்த மகளாகிய லீலாவதியைக் கொடுப்பதற்குத் தனக்கிஷ்ட மிருக்கிறதாகவும், எல்லோருமாகப் புறப்பட்டு நாளைத்தினம் இவ்விடம் வருவதாகவும் எழுதியிருக்கிறார். நாளைத்தினம் அவர் இங்கு வருவாராயின் அவருக்கு நான் என்ன உத்தரஞ் சொல்வது? வீண் பிடிவாதம் வேண்டாம்.—

சித். அப்பா, ஸ்ரீதத்தா, உன் பிதாவுக்கு வீணாக வருத்தத்தை உண்டு பண்ணாதே; நான் சொல்வதைக் கேள். முன்பு நீ கூறிய வார்த்தையை மீட்டுக்கொள்; அந்த லீலாவதியை விவாகஞ் செய்துகொண்டு எங்களைச் சந்தோஷிப்பி! அதுவே சற்குமாரனுக்கு அடையாளம்— அந்த லீலாவதி மிகவும் சுந்தர மமைந்தவளாம், மிகுந்த புத்திசாலியாம்.

ஸ்ரீ. அம்மணி! எனது மன நிலைமை உங்களுக்கு ஏன் தெரியாம லிருக்கிறது? ஐயோ! அந்த ஒரு வார்த்தை மாத்திரம் என்னிடம் கூறவேண்டாம்; வேறு எதையும் செய்யச் சித்தமா யிருக்கிறேன்.

வா. ஸ்ரீதத்தா! இப்பொழுது நீ கூறியதை மறக்காதே; வேறு எதைச் சொன்னபோதிலும் செய்கிறதாகக் கூறினை யல்லவா? —என்ன சும்மா யிருக்கிறாய்? என்ன சொல்லுகிறாய்?

ஸ்ரீ. ஆம்.

வா. அப்படி; ஸ்ரீதத்தா! எனது தொல்குலம் அழியாதிருக்கும் பொருட்டும் எனக்குப் பிற்காலமாவது உனக்குப் பிற்காலமாவது இங் நாட்டை ஆளும் பொருட்டும், எனக்கு ஒரு பௌத்திரனைப் பெற்றெடுத்துத் தா.

ஸ்ரீ. ஹா!

[ஸ்ரீதத்தர் மூர்ச்சையாக, கமலாகரர் தன் கையிலே தாங்கிக்கொள்ளுகிறார். சித்திரரேகாதேவி சைத்தியோபசாரம் செய்கிறாள்.]

விசி. 'நுணலுந் தன் வாயாற் கெடும்.'

வா. விசித்திரசர்மா! இதுவோ உனக்குப் பரிகாசஞ் செய்யும் சமயம்? உனக்கு இங்கென்ன வேலை? போ!

விசி. "குயவனுக்கொரு கடிகுளை
தடியனுக்கொரு நொடிவேலை."

இதோ போய்விட்டேன்; குணசேனரே, இப்படி வாரும்; ஒரு சமாசாரம்.

[குணசேனரை அழைத்துக்கொண்டு போகிறான்.]

ஸ்ரீ. [மூர்ச்சை தெளிந் தெழுந்திருந்து] ஐயனே ! இதுவோ உமக் கடுத்த நீதி? தாங்கள் மஹாராஜாவா யிருந்தும் இது தெரியாமற் போனதேனே? நான் விவாகஞ் செய்து கொள்ளாமல் புத்திரனை எப்படிப் பெறுவது? உலையி னின்றும் தீயில் வீழ்வதோ? நீர் வாக்களித்ததை நீரே மறுக்கலாமோ? நான் விவாகஞ் செய்துகொள்ளும்படி மாத்திரம் என்னைக் கேட்கலாகா தென்றேனே, மறுபடி யும் அதையே கேட்கிறீரே.

வா. அதையே நான் கேட்கவில்லை. நீ என்னுடன் நியாயம் பேசுவதிற் பய னில்லை. நீ விவாகஞ் செய்துகொள்ளும் படி மாத்திரம் உன்னைக் கேட்கலாகா தென்றாய். அதை நான் கேட்கவில்லை. எனக்கு ஒரு பௌத்திரனைப் பெற் றுக் கொடு.

ஸ்ரீ. அதற் கர்த்த மென்ன?

வா. வீணைப் பேசாதே! நீ கூறியதை மறவாதே! உன்னு டைய வேதாந்த சாஸ்திரத்தில் ஒருவன் கூறிய சொல்லை மறுக்கலாமென் றெழுதி யிருந்தால் உன் னிஷ்டப்படி நட; இல்லாவிட்டால் என் இஷ்டப்படி நட. நீ எனது குமாரன் என்பது மெய்யானால் என் வார்த்தையைத் தடுக்கமாட்டாய்—சித்திரரேகா, நாம் போவோம் வா.

ஸ்ரீ. [கமலாகரனைக் கட்டிக்கொண்டு கண்ணீர்விட் டழுது] கமலா கரா! நான் ஏனோ இப் புவியிற் பிறந்தேன்!

சித். கண்ணே! நீ விசனப்பட்டுப் பயனென்ன இனி? நீ கூறி ய மொழியினின்றும் தவறலாமோ? இனி என்ன செய் வது? பிதாவின் சொற்படி நடக்க வேண்டியதுதான். முதலில் இந்த மாசுற்ற ஆடையைக் களைந்துவிட்டு உனக்குரிய நல்ல ஆடை ஆபரணங்களை உடுத்திக்கொள். என் வார்த்தையைத் தடுக்காதே. கண்ணே, உனது நலத்தை விரும்பியே நாங்கள் இவ்வாறு கூறுகிறோம்; நாங்கள் போய் வருகிறோம்.

[சித்திரரேகையும் வாசவதத்த ராஜனும் போகிறார்கள்.]

பிர. [தனக்குள்] இதுதான் சமயம். மஹாராஜாவிடம் போய் பேசுவோம். [போகிறார்.]

கம. ஐயனே, ஏனோ இவ்வாறு வருத்தப்படுகிறீர்? தாங்கள் இவ்வாறு வருந்துவதைப் பார்த்து என் மனம் எப்படிப் பொறுக்கும்?

ஸ்ரீ. [தனக்குள்] அன்னையே! நான் உம்மிடம் வருகிறேன்! இனி நான் இவ்வுலகி லிருப்பது நியாய மன்று!—வேறு வழியில்லை.—கமலாகரா, ஸ்ரீதத்தன் என்று ஒருவன் இவ்வுலகத்தில் இருந்தா னென்பதை இனி மறந்துவிடு.—என்னுடைய உடைவாளை எடுத்துவா போ.

[எழுந்திருக்கிறார்.]

கம. ஐயோ! அவசரப்படவேண்டாம்!

ஸ்ரீ. கமலாகரா! நான் சொன்னபடி செய், போ சீக்கிரம்.

கம. ஐயனே, நான் சொல்வதைச் சற்று கேளும். இப்பொழுது உமது உயிரை நீர் மாய்த்துக்கொண்டால் உமது துயரமெல்லாம் நீங்கிவிடுமோ? உம்முடைய பேச்சை நீர் காப்பாற்றினவ ராவீரோ? தற்கொலை செய்து கொள்பவர்கள் மறு பிறப்பில் அதற்காகப் பல துயரங்கள் அனுபவிக்கவேண்டு மென்பதை மறந்தீரோ?

ஸ்ரீ. ஆம், ஆம், கமலாகரா! நீ கூறுவது உண்மையே! நான் இதுவரையிற் பிறந்த பிறப்பே போதும்; இன்னம் வேண்டுமோ?—ஆயினும் நான் என்ன செய்வது இந்தச் சங்கடத்திற்கு?

கம. நான் சொல்லுகிறேன் கேளும்; எல்லாம் அறிந்த தமக்கு நான் இவற்றைக் கூறுவது நியாய மல்ல; ஆயினும் கூறுகிறேன். தாம் இப்பொழுதே துறவறத்தைப் பூண்பது நியாயமன்று.

> "கைதவந்தா வீக்கிக் கருத்திற் கறையகற்றிச்
> செய்தவந்தா னெத்தனையுஞ் செய்தாலு—மைதீர்
> மகப்பெறு மானுடர்கள் வானவர்த மூர்க்குப்
> புகப்பெறுர் மன்னனே போந்து."

மகரிஷிக ளானவர்களும் சிலகாலம் இல்லறத்திலிருந்து அதன் சுகங்களே அனுபவித்துப் பிறகே துறவறத்தைப் பூண்டிருக்கின்றனர். தாமும் ஏன் அப்படிச் செய்ய லாகாது? தமக்குத் தகுதியான சகல சற்குணமும் அமைந்த ஒரு பெண்ணே விவாகஞ் செய்துகொண்டு, சில காலம் இல்லறத்தின்படி நடந்து, தமது தந்தை தாயரை யும் எம்மையும் சந்தோஷிக்கச் செய்து, பிறகு துறவறத் தை ஏன் அடையலாகாது?

ஸ்ரீ. அப்பா கமலாகரா! பெண்ணென்னும் பேயின் குணத் தை நீ அறியாய்! ஐயோ! பெண்ணென்னும் படுகுழியில் நான் ஒருகால் வீழ்வேனுயின் அதினின்றும் மறுபடியும் மீளேன்! மீளேன்!

கம. ஐயனே, தாங்கள் எல்லா ஸ்திரீகளேயும் ஒன்ருய் மதிக்க லாகாது. ஸ்திரீகளிலும் ஸ்திரீக ளிருக்கிருர்கள். சில மாதுசிரோமணிகள் தமது கணவரைக் காலம் வந்த போது துறவறத்தின் வழித் திருப்பியதாக ஞானவாசிஷ் டம் முதலிய கிரந்தங்களிற் கூறி யிருப்பது தாம் அறி யாத விஷய மன்று; ஆகவே தாங்கள் தக்க ஒரு பெண் மணியை மணந்து, சிற்றின்பங்களே யெல்லாம் அனுபவித் துப் பிறகே துறவறத்தை மேற்கொள்ள வேண்டும். குற் றமற்ற இல்லறத்தில் நிற்பவர்களுக்குத் துறவறம் எதற்கு?

"அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்?"

ஸ்ரீ. சிச்சி! இச் சிற்றின்பத்தில் என்ன இருக்கிறது?

கம. ஐயனே, அப்படி யல்ல, அவ்வளவு இலேசாகக் கூறி விடாதீர்! காதலின் பெருமையைபற்றித் தெய்வப் புல மைத் திருவள்ளுவநாயனுர் கூறியிருக்கிறது கொஞ்சமல்ல அதனே அனுபவித்தவர்களுக்கே அதன் பெருமை தெரி யும்! நற்குண நற்செய்கையையுடைய ஓர் ஆடவன், ஒரு பெண்மணியின்மீது உண்மையாகக் காதல்கொள்ள, அப்

பெண்மணியும் அவன்மீது அப்படியே காதல்கொள்வாளாயின், அவ் விருவரும் அனுபவிக்கும் சுகமே சுகம்! அதைப் பார்க்கிலும் சிறந்த சுகம் இவ் வுலகிலில்லை. அவ்வாறு காதல்கொண்ட இரண்டு பெயரும் மணந்து சுகமாய் இணை பிரியாது வாழ்வாராயின், அதினும் அழகிய காட்சி இவ் வுலகில் வேறென்னதான் இருக்கிறது? தெய்வ கடாக்ஷத்தால் அவர்களுக்கு ஒரு மக னுதிப்பானாயின், தேன் மாரி பொழிய ஒரு மதுரமான மாங்கனி கிளையினின்றும் நழுகிப் பாலில் வீழ்ந்ததுபோலும்.

ஸ்ரீ. அப்பா, கமலாகரா, நீ கூறியதெல்லாம் இக் கலி யுகத்திற்கு ஏற்றதன்று. இந்த யுகத்திலே தம் கணவர்மீது எக்காலமும் காதல்கொண் டிருந்து, கணவன் முதிர் வயதில் துறவு மார்க்கத்தை மேற்கொள்ள விரும்புவானாயின் அதற் குடன்படும் ஸ்திரீகளும் இருக்கிறார்களோ?

கம. இளவரசே, தாங்க ளவ்வாறு எண்ணுவதற்கு நியாயமில்லை. இவ்வுலகத்தில் மற்றெல்லாரும் கெட்டவர்களாயிருந்தபோதிலும் ஒரு ஸ்திரீயாவது நல்லவளா யிராமற் போகமாட்டாள். அப்படிப்பட்ட ஸ்திரீயைத் தேடித் தாங்கள் ஏன் விவாகஞ் செய்துகொள்ள லாகாது?

ஸ்ரீ. ஆம், நீ கூறுவது ஒரு விதத்தில் உண்மையே; ஆயினும் —சீச்சீ! கமலாகரா! இதென்ன வீண் யோசனையில் காலம் கழிக்கிறோம்; இன்னும் ஒரு க்ஷண நேரத்தில் இறக்கவேண்டி வரினும் வருமென்பதை மறந்து என்ன என்ன யோசிக்கிறோம்!

“காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய்ப் படுமுன்னே—மேல்விழுந்தே
உற்றா ரழுமுன்னே யூரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு.”

என்று நாம் செல்லவேண்டிய நெறியைக் கருதாது வீணாகக் கழித்தோம் காலத்தை. கமலாகர, என் மனம் மிகவும் சஞ்சலத்தை அடைந்திருக்கிறது. தாயு

மானவர் பாடலில் "காடுங்கரையும்" என்னும் பாடலைச் சற்று பாடு.

கம. [ராகத்துடன் பாடுகிறான்.]

"காடுங் கரையு மனக்குரங்கு கால்விட் டோட வதன்பிறகே
ஓடுந் தொழிலாற் பயனுளதோ வொன்றாய்ப் பலவா யுயிர்க்குயி
ஆடுங் கருணைப் பரஞ்சோதி யருளைப் பெறுதற் கன்புநிலே [ராய்
தேடும் பருவ மிதுகண்டீர் சேர வாருஞ் சகத்தீரே."

[ஸ்ரீதத்தர் கண்பொத்திக் கரங் கூப்பி வணக்கத்துடன் கேட்கிறார். கமலாகரன் அப்பாடலின் முடிவில் அதனுடன் சேர்ந்தாற்போல ஒரு சிருங்கார ரசமமைந்த பாட்டைப் பாடுகிறான். ஸ்ரீதத்தர் மெல்லக் கண்விழித்து அதையும் கேட்டு வருகிறார். இத்தருணத்தில் சுலோசனையின் காத்தினின்றும் கழன்று வீழ்ந்த கைவளை அவர் கண் முன்பட அதைக் கையில் எடுத்துக் கொள்கிறார்.]

ஸ்ரீ. [திடுக்கிட் டெழுந்து கமலாகரன் வாயைப் பொத்தி] இதென்ன விது? கமலாகரா! நான் உன்னைத் தாயுமானவர் பாடலைப் பாடச் சொன்னேனே, அல்லது இத் துஷ்டப் பாட்டை பாடச் சொன்னேனே? நானும் ஏதோ ஞாபக மறதியாகக் கேட்டுக்கொண் டிருந்துவிட்டேன்!

கம. அரசே, என்னை மன்னிக்க வேண்டும் நானும் ஏதோ ஞாபக மறதியாகப் பாடிவிட்டேன். வசந்தகாலம் பிறந்து விட்டதே; ஆகவே சாதாரணமாக என் மனஞ் சிற்றின் பத்திற் சென்றது;—அதிருக்கட்டும், ஐயனே, இக் கைவளை யேது உமக்கு?

ஸ்ரீ. இங்கே கீழே கிடந்தது.

கம. ஓஹோ, எனக்கு ஏதோ சந்தேகமாக இருக்கிறது—[தனக்குள்] ஆ! இதுதான் நமக்கு நல்ல சமயம்.

ஸ்ரீ. என்ன விளையாடுகிறாய்?

கம. இல்லை, இல்லை, இது யாருடையது தெரியுமா உமக்கு?

ஸ்ரீ. தெரியாது; யாருடையது? யாருடையதா யிருந்தாலுமென்ன?

கம. அன்றைத்தினம் வனத்தில் அநாதையாக இருந்ததாகக் கூறித் தாம் அழைத்து வந்து சித்திரரேகாதேவிக்குப்

பாங்கியாக இருக்கும்படி விட்டீரே ஓர் ரூபவதியான பெண்ணை, ஞாபக மிருக்கிறதா? அப் பெண்ணினுடைய பணிவிடைக்குச் சந்தோஷப்பட்டு, சித்திரரேகாதேவி பரிசாகச் சிறந்த கை வளையொன்று கொடுத்தார்களாம்; சித்திரரேகாதேவியே என்னிடம் கூறினார்கள்; அதுவாகத்தான் இருக்கவேண்டும் இது, இங்கே கழன்று விழுந்து விட்டாற்போ லிருக்கிறது.—ஐயனே, அப் பெண் யார் தெரியுமா உமக்கு?

ஸ்ரீ. அதை யேன் கேட்கிறாய் என்னை? எனக் கென்ன தெரியும்?

சுலோசனை அந்தக் கைவளையைத் தேடிக்கொண்டு ஒருபுறம் வருகிறாள்.

கம. இல்லை, அப் பெண் மிகவும் சௌந்தரிய முடையவளாயிருக்கிறாள். அவளுடைய நற்குண நற்செய்கைகளைப் பற்றிச் சித்திரரேகாதேவி மிகவும் வியந்து பேசுகிறார்கள். அப் பெண்ணைப் பார்க்கும்போ தெல்லாம் யாரோ ஒரு ராஜகுமாரியைப் போலவே எனக்குத் தோற்றுகிறது.—அதோ! பாவம்! இதைத் தேடிக்கொண்டு வருகிறாற்போ லிருக்கிறது. இப்படிக் கொடும், நான் கொடுத்து விடுகிறேன்.

[அவ் வளையை ஸ்ரீதத்தரிடமிருந்து வாங்கிக் கொண்டு]

தாங்கள் நேராக அப் பெண்ணுக்கு இதைக் கொடுப்பது எனக் கிஷ்டமில்லை; தாங்கள் எல்லாவற்றையுந் துறந்தவராயிருந்தபோதிலும் ரூபவதியான யௌவன ஸ்திரீயின் முன்பாகத் தம்மை அனுப்புவது எனக் கிஷ்ட மில்லை. பிறகு விதூஷகர் கூறியபடி தம்முடைய யோகமெல்லாம் மோகமாய் முடிந்தால்—

ஸ்ரீ. [கமலாகரன் கரத்தினின்றும் அவ் வளையைப் பிடுங்கிக்கொண்டு] கமலாகரா! என்னை ஓர் அற்பனென்றா நினைத்தாய்? எனக்கு அவ்வளவு மன வுறுதி இல்லையென் றெண்ணினையோ! ஆயிரம் ஸ்திரீகளின் நடுவில் என்னை நிறுத்தி

போதிலும் என் மனம் வேறு படாது. இதோ பார், நான் நேராகக் கொண்டு போய்க் கொடுக்கிறேன்.

கம. இப்பொழுதே சொன்னேன், வேண்டாம், இப்படிக் கொடுத்துவிடும்.

ஸ்ரீ. சீ! விடு கையை; அவ்வளவு மன வுறுதி யற்றவனா நான்?

கம. அப்புறம் உம்முடைய இஷ்டம். என்னிடங் கொடுப்பீராயின் நான் கரத்திலேயே அணிந்துவிடுவேன்.

ஸ்ரீ. அதை நான் செய்கிறேன் பார்—

[சுலோசனை அருகிற் போகிறார்.]

பெண்ணே,— இது உன்னுடையதோ?

சு. [தலை குனிந்துகொண்டு] ஆம்.

ஸ்ரீ. இதோ—இதை—அணிந்துகொள்.

[சுலோசனையினுடைய கரத்தில் அவ் வளையைப் போடுகிறார். அப்பொழுது இருவருடைய கண்களுஞ் சந்திக்கின்றன. வளையை யணிந்தபின் சுலோசனை விரைவுடன்போய் விடுகிறாள். ஸ்ரீதத்தர் அவள் சென்ற திசையிற் சற்று உற்றுப் பார்த்து விட்டு திருப்பிக் கமலாகரரிடம் வருகிறார்.]

இப்பொழு தென்ன சொல்லுகிறாய்?

கம. என்ன சொல்வது?— என்ன சொல்வது?

ஸ்ரீ. என்ன?

கம. நான் அப்பொழுதே சொன்னேன் கேட்டீரா? இனி என்ன செய்வது? தலை விதியின்படி ஆகிறது!

ஸ்ரீ. என்ன, கமலாகரா! நீசொல்வதொன்றும் எனக்குப் புலப்படவில்லை. என் மனம் வேறுபட்டதென்று நினைக்கிறாயோ? அப் பெண்மணியின்மீது நான் காதல் கொண்டு விட்டேனென்று சொல்லுகிறாயோ?

கம. ஐயனே, "குற்றமுள்ள நெஞ்சு குறு குறென்னும்" என்பதுபோல் நான் ஒன்றுஞ் சொல்லா திருக்கும்போது நீரே அதை ஏன் சொன்னீர்?—ஏன் ஒளிக்கிறீர்?

ஸ்ரீ. சீச்சீ! கமலாகரா! அப்படி யொன்று மில்லை. உனக்கென்ன பைத்தியம் பிடித்திருக்கிறதா என்ன?

கம. ஆம், பைத்தியந்தான் பிடித்திருக்கிறது—அரசே, நீர் விரும்பிய பொருளைச் சீக்கிரம் பெற்று நீடூழி காலம் சுகமாக வாழ்வீராக!

ஸ்ரீ. என்ன அதையே சொல்கிறாயே? இன்னும் என் மனம் வேறு பட்டிருக்கிறதென்று எண்ணுகிறாய்?

கம. அதை யேன் என்னைக் கேட்கிறீர்கள்? உமது கண்களைக் கேளும். உங்கள் இருவருடைய கண்களும் சந்தித்த பொழுது அக் கண்களைக் கேட்டிருப்பீராயின், அவைகளே இவ் வுண்மையைக் கூறி யிருக்கும்.

> "கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
> ளென்ன பயனு மில."

சற்றே பொறும் எல்லாம் இன்னும் இரண்டு மூன்று நாட்களுக்குள் வெளியாகி விடுகின்றன.

ஸ்ரீ. சீ, அப்படி ஒன்று மில்லை. கமலாகரா, நான் சொல்வதைக் கேள்.

கம. ஒன்று மில்லை, கேட்பானேன்? பிடித்தாலும் புளியங் கிளையைப் பிடித்தீர்; இப்படி யல்லவோ இருக்கவேண்டும்.

ஸ்ரீ. உனக்குப் பைத்தியந்தான் பிடித் திருக்கிறது என்று நினைக்கிறேன்; இவ் வார்த்தையை மறுபடியும் என்னிடம் கூறாதே.

குணசேனர் வருகிறார்.

குண. அரசே, உம்மைச் சித்திரரேகாதேவி சீக்கிரம் காண விருப்பமுற் றிருக்கிறார்கள்.

ஸ்ரீ. அப்படியா? இதோ போகிறேன்.

[குணசேனர் போகிறார்.]

கம. ராஜபத்னியிடம் எல்லாவற்றையும் சொல்லவா?

ஸ்ரீ. என்ன சொல்லப் போகிறாய்? சீ, பேசாம லிரு.

[போகும்பொழுது]

உம்—அப் பெண்மணியின் பெயரென்ன கமலாகரா?

கம. சாவித்திரி. [ஸ்ரீதத்தர் போகிறார்]

காட்சி முடிகிறது.

# மூன்றாவது அங்கம்



## முதற் காட்சி

*இடம்—அரண்மனையில் ஸ்ரீதத்தருடைய அந்தரங்கமான அறை.*

காலம்—சூரியாஸ்தமனம்.

ஸ்ரீ. [அறையிலிருக்கும் ஓர் நிலைக் கண்ணாடியின் முன்பாக நின்று கொண்டு] இவ் வாடை யாபரணங்களை அணிந்து கொள்ளும் விதத்தையும் மறந்து விட்டேன்! இக் கோலத்துடன் எப்படி நான் ஒருவர் முன்பாகப் போவது? என் எதிராகக் கூறாவிட்டாலும் எனக்குப் பின்னாகவாவது எல்லோரும் என்னை ஏளனஞ் செய்வார்கள். உலகப் பற்றை யெல்லாம் துறந்தவனுக் கேற்றவைகளோ இவைகள்? எப்படி யிருந்த போதிலும் சித்திரரேகாதேவிக்கு நான் கூறிய மாற்றம் தவற லாகாது. அதுவுமன்றி இந்த ஆடை யாபரணங்களை நான் விரும்பி அணிந்து கொண்டவ னல்லனே; எல்லாப் பொருள்களையும் சமானமாக நினைக்கவேண்டிய நான் எதை யணிந்தாற்றா னென்ன? இதெல்லா மிருக்கட்டும்.—சீச்சீ! என்ன பைத்தியக்காரனைப்போல் நடந்து விட்டேன்! என்ன ஞாபக மறதியாய் சித்திரரேகா தேவியிடம் நான் விவாகஞ் செய்துகொள்வதாக ஏற்றுக்கொண்டேன்! என்ன புத்தியற்ற செய்கை! நான் இப்பொழுது விவாகஞ் செய்துகொள்வேனாயின் எனது துறவற மெல்லா மென்னவாகிவிடும்? என் புத்தி என்னை விட்டுச் சிறிது காலம் நீங்கி யிருந்தாற்போ லிருக்கிறது; இதற்குச் சந்தேகமில்லை; எல்லாம் அந்தப் பெண் சாவித்திரியினால் உண்டானது.—சீச்சீ! இந்த ஆசையை இப்பொழுதே அடக்கிவிடவேண்டும். துறவறத்திலிருக்கு மெனக்குப் பெண்ணாசை யென்ன?—என்ன புத்தி யற்றவனா யிருக்கிறேன் நான்! எரியினி லிடும் வாழ்வைச் சதமென வெண்ணிச் சிற்றின்பச் சேற்றில் அமிழ விருந்தேனே! பெண்

என்கிற சப்தத்தைக் கனவிலும் கேட்க லாகாதென்று பெரியோர்கள் கூறி யிருப்பதை நான் அறிந்திருந்தும், இப் பெண்ணென்னும் நீக்கக்கூடாத வலையில் அகப் படப் பார்த்தேனே! துறவிகள் ஸ்திரீகளைக் கண்ணெடுத் துப் பார்க்கலாகாது என்று கூறியதி னுண்மையை இன் றே கண்டேன்! இப் படு குழியில் நான் வீழ்வே னாயின் மீளுவது அசாத்தியம்.—ஐயோ! இதென்ன மறுபடியும் அந்த சாவித்திரியின் ஞாபகமே வருகிறது! சிச்சி!— அந்த ஞாபகம் மறுபடியும் வாராதபடி தேவாரத்திலுள்ள பாசுரங்களையாவது சொல்லிக்கொண் டிருப்போம்.

[தலை வணங்கிக் கரங் கூப்பிப் பாடுகிறார்.]

" மனமென்னும் தோணி பற்றி மதியெனுங் கோலையூன்றிச்
சினமெனுஞ் சரக்கையேற்றிச் செறிகட லோடும்போது
மதனெனும் பாறை தாக்கி—"

[என்று பாடிக்கொண்டு வரும்பொழுது, உள்ளே சாவித்திரியின் குரல் "அப்படியே செய்கிறேன் அம்மா" என்று கேட்க, பாட்டை நிறுத்திவிட்டு, சற்று நேரம் உற்றுக்கேட்டுப் பெருமூச்செறிந்து]

ஆ! அது சாவித்திரியின் குர லல்லவோ?—ஆம், அதற் குச் சந்தேகம் என்ன? வேறு யாருடைய குரல் எனது செவிக்கு இவ்வளவு இன்பம் தரப் போகிறது? ஐயோ! அக்குரலை நான் மறுபடியும் எப்பொழுது கேட்கப் போ கிறேன்? சாவித்திரி, மறுபடியும் எனது செவி இன்ப மடையும்படி செய்யமாட்டாயா? சாவித்திரி, என் கண் மணியே, இன்னும்,—சிச்சி! ஐயோ! இதென்ன பிராரப்தமா யிருக்கிறது! இந்த அபராதத்திற்கு என் னுடைய நாவை அடியுடன் அறுத்துவிட்டாலும் தீரா தே! நானே எனது நாவால் ஓர் தோற்பையைக் கண்மணி யென்று அழைப்பது? ஐயோ! ஐயோ! இதென்ன எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா என்ன! ஐயோ! என்னைப் பிறர் கண்டால் நகையார்களோ? இதுவோ என்னுடைய விதி? என் மனத்தை நான் எவ்வளவு

திருப்ப முயன்றும் முடியவில்லை—விதியை விலக்குவார் யாவர் ?

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்"

[பெருமூச்சுடன் மஞ்சத்தின்மீது சாய்கிறார்.]

கமலாகரர் வருகிறார்.

கம. [தனக்குள்] சரி, சரி,—இனி வேறொன்றுஞ் செய்யவேண்டிய தில்லை; போதும்; இந்தச் சூக்ஷமத்தை யறியாது மஹாராஜா வருந்திக்கொண் டிருந்தார் பாவம்!—ஐயனே, இதென்ன ?

ஸ்ரீ. ஆ! கமலாகரா—

கம. அரசே, இப்பொழுது நீர் எதைப்பற்றி எண்ணிக்கொண் டிருக்கிறீரென்று நான் சொல்லவா ?

ஸ்ரீ. சொல் பார்ப்போம்.

கம. சொன்னால் அது உண்மையா யிருக்குமாயின், சரிதான் என்று ஏற்றுக்கொள்ளும் பக்ஷத்தில் நான் சொல்லுகிறேன்; ஒரே பதத்தில் சொல்லுகிறேன்.

ஸ்ரீ. அப்படியே சொல்.

கம. சாவித்திரி.

ஸ்ரீ. சீ!—ஆம், நீ கூறியது உண்மையே. கமலாகரா, என்ன தப்பிதஞ் செய்தேன் நான்! நான் ஏன் சாவித்திரியை வனத்திலிருந்து அழைத்து வந்தேன் ? நான் ஏன் அவளைப் பூந்தோட்டத்தி லன்று கண்டேன் ?

கம. அதற்காக வருத்தப்படுகிறீரோ ? எனக்கு அப்படி நேரிட்டதே என்று மிகவும் சந்தோஷமா யிருக்கிறது.

ஸ்ரீ. கமலாகரா, உனக்கொன்றுந் தெரியாது.

கம. எனக் கென்ன தெரியும் ?

ஸ்ரீ. நான் சாவித்திரியின்மீது காதல்கொண் டிருக்கிறேனென்று நினைக்கிறாயா என்ன ?

கம. அதை ஏன் என்னைக் கேட்கிறீர்? உம்மை நீரே கேட்டுக் கொள்ளும். அதிருக்கட்டும்,—ஐயனே, ஏது தாங்கள் இந்த ஆடை ஆபரணங்களை யெல்லாம் தரித்தது? நானிங்கு வந்த பொழுது உம்மை அடையாளங் கண்டு பிடித்தலே கடினமா யிருந்தது.

ஸ்ரீ. சித்திரரேகா தேவிக்கு நான் வாக்களித்தபடி செய்ய வேண்டியதாயிற்று, நானென் செய்வது? இல்லறத்தை விரும்பி இவைகளையெல்லாம் அணிந்தேனென்று நினைத்தனையோ?

கம. சே! அப்படி நினைப்பேனா?—ஐயனே, இப்பொழுது தங்களைப் பார்த்தால் சாவித்திரியாகிய ரதிக்கேற்ற மதனனைப்போற் றோற்றுகிறீர்!

ஸ்ரீ. சிச்சி! இன்னும் அந்தப் பைத்தியம் விடவில்லையோ?

கம. ஆயினும் எனக்கொரு சந்தேகம்; சாவித்திரி பாங்கியாயிற்றே, சக்ரவர்த்தியினுடைய குமாரன் ஓர் பாங்கியை மணம் புரியலாமா வென்பதுதான்.

ஸ்ரீ. கமலாகரா, உனக்கென்ன தெரியும்? சாவித்திரி பாங்கியா யிருந்தால் என்ன? உலக முழுதும் சக்ரவர்த்தினியா யாள அவளிடம் குணங்களிருக்கின்றன. இப் பூலோக முழுவதும் சுற்றியபோதிலும் அவளை யொத்த நற்குண நற்செய்கைகள் அமைந்த மாதை நீ காண்பதரிது; அவளுக்கவளே யீடு! அதுவு மன்றி மெய்க் காதல், பொருள் குலம் முதலியவற்றை யெல்லாம் கடந்தது என்பதை அறியாயோ? உனக்கென்ன தெரியப் போகிறது காதலைப்பற்றி?

கம. கேட்பானேன்? எனக்கென்ன தெரியும் காதலைப்பற்றி? எல்லாம் துறந்த உம்மைப்போன்ற யோகிகளுக் கல்லவோ தெரியும்!

ஸ்ரீ. [திடீரென் றெழுந்திருந்து] ஆம், கமலாகரா, நன்றாகச் சொன்னாய். இனி நான் ஒரு க்ஷணமேனும் சாவித்திரி யிருக்கும் இல்லத்தில் இருப்பேனாயின், எனது துறவற

மழிந்து எல்லோரும் என்னைப் பார்த்து நகைக்க ஆளா வேன். இந்த க்ஷணமே—இந்த க்ஷணமே—இந் நகரத்தை விட்டுத் தேச சஞ்சாரம் செய்யப் போகவேண்டும். சீ! இதனுடன் இப் பற்றை நான் அடக்காவிட்டால் பிறகு என் கதி என்னவாகும்?

கம. ஐயனே, இதென்ன, பழம் நன்றாய்ப் பழுத்து வரும்போ மூது அணில் கடித்ததுபோலாயதே! அவசரப்படவேண் டாம் அவசரப்பட வேண்டாம்.

ஸ்ரீ. விடு என் கையை; உனக் கிஷ்ட மிருந்தால் இங்கேயே யிரு; நான் இனி ஒரு க்ஷணமேனும் அப் பெண்மணி யிருக்கு மிடத்தில் இருக்கலாகாது. நா னின்னும் ஒரு முறை அவளைக் காண்பேனாயின்—அப்பா!—விடு என் கையை—

கம. ஐயனே, அப்படியானால் இந்த க்ஷணம் சாவித்திரி இந் நகரத்தை விட்டுச் செல்லும்படி செய்கிறேன், நீரேன் போகவேண்டும்?

ஸ்ரீ. கமலாகரா, அது நியாயமன்று; ஐயோ பாவம்! ஒரு குற்றமு மறியாத அப் பேதை எனக்காக ஏன் வருந்த வேண்டும்! யோகிகள் முக்கியமாக ஜீவகாருண்ய முடை யவர்களா யிருக்கவேண்டும். சாவித்திரி சுகமாக இங் கேயே வாழ்ந்துகொண் டிருக்கட்டும். நான் போகிறேன்.

கம. அப்படியே செய்யுங்கள். ஆனால் போகுமுன் எனக் கொரு சந்தேக மிருக்கிறது; அதைத் தெளிவித்துப் போகவேண்டும்.

ஸ்ரீ. என்ன?

கம. ஓர் யோகி ஒரு குற்றமற்ற பேதையைக் கொல்வானாயின் என்ன பாபம் வரும் அவனுக்கு?

ஸ்ரீ. சிவ! சிவ! அதை நான் கேட்பதும் தவறு.

[காதைக் கரத்தால் மூடிக் கொள்ளுகிறார்.]

கம அதைத்தான் கேட்டேன். ஐயனே, ஆனால் தங்களை அந்தப் பாபம் சூழவேண்டுமென்று விருப்ப மிருக்கு

மாயின் தாங்கள் இவ் வரண்மனையை விட்டுப் புறப்படுங்கள்.

ஸ்ரீ. கமலாகரா, அதென்ன அப்படிக் கூறினை ?

கம. ஐயனே, சற்று அவசரப்படாமல் கேட்கும் பக்ஷத்தில் சொல்லுகிறேன் ; சற்று உட்காரு மிப்படி.

[ஸ்ரீதத்தர் உட்காருகிறார்.]

அரசே, சகல சற்குணமும் நல்லறிவும் பெற்ற ஓர் பெண் பேதை உம்மீது உண்மையாகக் காதல்கொண் டிருக்கிறாள் ; இனி இவ் வுலகில் தான் பெறப்போகிற இன்பத்திற் கெல்லாம் தம்மையே எதிர்பார்த்துக்கொண் டிருக்கிறாள் ; தம்மையே நம்பித் தாமே சரணாகதியென வெண்ணித் தம்மைப் பற்றியே எப்பொழுதும் மனத்தில் நினைத்துக்கொண் டிருக்கின்றவள் ; தம்மைக் கருதியே இவ் வுலகில் உயிர் வாழ்பவள் ; அப்படிப்பட்ட ஓர் பெண் பேதைக்குத் தாம் தீங்கிழைத்தல் தர்மமோ ? சற்று முன்பாகப் பிறருடைய மனம் நோகா திருக்கச் செய்தலே தங்களைப்போன்றவர்களுடைய முக்கியமான கடமையெனக் கூறினீர் ; அப்படி யிருக்க, நற்குணமே ஓர் பெண் ணுருக்கொண்ட தொத்த ஓர் மாதுசிரோமணியினுடைய மனத்தைக் கலங்கச் செய்வது, அவளுடைய இன்பத்தை யெல்லாம் அழித்து, அவ ளெண்ணிய எண்ணங்களை யெல்லாம் பாழாக்கி, நீரே கதியென்று உம்மைப் பூரணமாக நம்பிய அப் பெண்மணியை, முடிவில் உம்மீது கொண்ட காதலினால் உமது பிரிவை யாற்றாது இறக்கவும் செய்தல் உமக்கு நீதியோ ? ஐயனே, நன்றாய் யோசித்துப் பாரும் ; பெண் கொலை மிகவுங் கொடியது. அதிலும் இப்படிப்பட்ட மங்கையர்க் கரசியைக் கொல் வீராயின் உம்மை என்ன பாபம் சூழும் என்று நீரே யோசித்துப் பாரும். அரசே, இது நியாய மன்று. அவள் உம்மையே நம்பியிருக்கிறாள் ; நீர் அவளை வெறுத்து இந் நகரத்தை விட்டுச் செல்வீராயின் அவள் உயிர் துறப்பா ளென்பது திண்ணம்.

ஸ்ரீ. என்ன கபலாகரா? நீ கூறுவ தொன்றும் எனக்குப் புலப்படவில்லை. அப்படி யார் என்மீது காதல்கொண் டிருக்கிறது?

கம. ஒன்று மறியாதவர்போல் கேட்கிறீரே! ஐயனே, சாவித்திரியினுடைய உயிரைப் போக்கும் பழி தம்மை வந் தணுக விருப்ப மிருக்குமாயி னுமக்கு, நீர் உம திஷ் டப்படி இந் நகரைவிட்டுப் போம்.

ஸ்ரீ. என்ன! சாவித்திரியா என்மீது காதல்கொண் டிருக் கிறுள்? என்ன விளையாடுகிறுயா?

கம. நானே விளையாடுகிறேன்? ஐயனே, அன்றைத்தினம் பூஞ் சோலையில் உங்க ளிருவருடைய கண்களும் சந்தித்த பொழுதே நீங்க ளிருவரும் ஒருவர்மீ தொருவர் காதல் கொண்டீர்க ளென்பதைக் கண்டுகொண்டேன்.

ஸ்ரீ. அதைக்கொண்டோ சாவித்திரி என்மீது காதல்கொண் டிருக்கிறுளென்று தீர்மானித்துவிட்டாய்?

கம. அவசரப்படாதீர், நான் சொல்வதை யின்னுங் கேளும். அன்று முதல் எனக்கு இது சந்தேகமாகவே யிருந்தது. நேற்றைத்தினம் இரவு சந்தேக நிவர்த்தியாய்விட்டது. நேற்றைத்தினம் உறக்கம் வராது, நந்தவனத்திற் சென்று சற்று உலாவலாமென்று போனேன்; அர்த்த ராத்திரி யா யிருந்தும் அங்கு தனக்குள் தானுக மெல்லிய குரலு டன் அழுவதுபோல ஓர் ஸ்திரீயின் குரல் கேட்க, நான் மெல்ல விருக்ஷங்களின் மறைவாக அவ்விடஞ் சென்று பார்க்க, சாவித்திரி நீர் சாதாரணமாக உட்காரும் பளிங் குக் கல்லின்மீது உட்கார்ந்துகொண்டு, உம்முடைய பட மொன்றைக் கையில் வைத்துக்கொண்டு, அதற்கு முத்த மிட்டுக் கொண்டே அழுதுகொண்டிருந்தாள். நிலவு வெளிச்சத்தில் இதெல்லாம் எனக்கு நன்றுய்த் தெரிந் தது. அந்தப் படம் நீர் பத்மாக்ஷிக்குக் கொடுத்தது போல் தோன்றுகிறது. அது எப்படி சாவித்திரியின் கையில் வந்ததோ தெரியவில்லை. ஐயனே, அப் பெண் அந்த இரவில் உம்முடைய படத்தை முத்த மிட்டுக்

கொண்டு அழுது கொண்டிருந்ததைப் பார்த்தால் பேய்களும் இரங்கியிருக்கும்; உம்மை நினைத்து அப் பெண் புலம்பிய மொழிகளைக் கேட்டிருக்குமாயின் கருங்கல்லும் உருகி யிருக்கும்; அவைகளை யெல்லாம் உமக்குக் கூற என்னல் முடியாது. ஆயினும் இதை மாத்திரம் நான் உமக்குக் கூறக்கூடும். சாவித்திரி உம்மீது உண்மையில் மிகுந்த காதல்கொண் டிருக்கிருள்; நீர் அவளை வெறுத்து இப் பட்டணத்தைவிட்டுச் செல்வீராயின், அவள் தனது உயிரை மாய்த்துக்கொள்வா ளென்பதற்குச் சந்தேக மில்லை.

ஸ்ரீ. கமலாகரா, நீ கூறியதெல்லாம் உண்மைதான?

கம. அப்படி உமக்குச் சந்தேகமா யிருக்குமாயின், இன்றிரவு நீர் நந்தவனத்திற்குச் சென்று மறைந்திருந்து பாரும். ஒவ்வொரு தினமும் சாவித்திரி இரவில் அங்கு வருகிருள்போ லிருக்கிறது.

ஸ்ரீ. [தனக்குள்] கண்ணே, இன்றிரவு நீ வருந்துவது கடைசி முறையாகும்.

கம. ஐயனே, என்ன யோசிக்கிறீர்?

ஸ்ரீ. ஒன்று மில்லை.

விசித்திரசர்மன் வருகிருன்.

கம. விதூஷகரே, வாரும்.

விசி. பலே! அப்படி! சரி! சரி! தவஞ் செய்வதில் விசுவாமித்திருக்குத் தமயன் இவர்! தாடி ரிஷிகளாலாகாதது இவரால் ஆகப்போகிறதா?—ஐயா, இங்கே ஒரு யோகீஸ்வரர் இருந்தார், அவரைத் தேடுகிறேன்; எங் கிருக்கிருர் தெரியுமா உமக்கு? சந்நியாசியைப்போ லிருப்பார்—முற்றுந் துறந்தவர் அவர்!

ஸ்ரீ. விசித்திரசர்மா!

விசி. ஓஹோ! தாங்களா? அடையாளமே தெரியவில்லை. ஐயனே, இனி இவ் வுலகில் அசாத்தியம் என்கிறதே

இல்லையென்று தீர்மானித்து விட்டேன். யோகீஸ்வரரே, தங்களுக்கும் லீலாவதிதேவிக்கும் விவாக மாகிற பொழுது என்னை மறந்துவிடப் போகிறீர்!

ஸ்ரீ. கமலாகரா! அவர்களெல்லாம் இங்கு வந்துவிட்டார்களா இதற்குள்ளாக?

கம. ஆம், அரண்மனையின் தென்பாரிசத்தில் அவர்களுக்கு வேருக இருப்பிடம் அமைக்கப்பட்டிருக்கிறது.

விசி. அரசே, யோகிகளுக்கும் போகிகளுக்கும் அவ்வளவாக வித்யாசமில்லையென்று இன்றே கண்டேன்!

ஸ்ரீ. விசித்திரசர்மா, போகிகளுக்கும் ரோகிகளுக்கும் பேதமில்லை யென்று கூறி யிருக்கவேண்டும் நீ.—நான் சற்று தனியாக இருக்க விரும்புகிறேன்.

விசி. இதில் கொஞ்சம் மரியாதையா? இந்த அரையைவிட்டு வெளியே செல்லுங்களென்று சொல்லுகிறது தானே!

[கமலாகரரும் விசித்திரசர்மனும் போகிருர்கள். பிறகு ஸ்ரீதத்தர் அவ் வறையில் ஓர் புறமிருக்கும் தன் தாயாருடைய படத்தருகிற் சென்று நமஸ்காரம் செய்கிருர்.]

காட்சி முடிகிறது.

—o—

## இரண்டாவது காட்சி

இடம்—அரண்மனையைச்சார்ந்த நந்தவனத்தில் ஓர் கதலிக்கிருகம்.

காலம்—பூரண சந்திரனேடுகூடிய இரவு.

ஸ்ரீதத்தர் வருகிருர்.

ஸ்ரீ. இதுதான் கமலாகரன் கூறிய இடம். இக் கதலிக் கிருகத்தில் சந்திரிகை பிரகாசிப்பது என்ன அழகா யிருக்கிறது! [சுற்றிப் பார்க்கிருர்.]
ஆயினும் இதைப் பார்க்கும்பொழுது இதில் ஏதோ ஒரு குறை யி ,,க்கிருற்போல் தோற்றுகிறது.—ஏன் சாவித்

திரி இன்னும் இங்கு வரவில்லை? என தருமைப் பெண்ணரசி வருங் காலமாகவில்லையோ? இன்றைத்தினம் ஏன் இராப்பொழுது இவ்வாறு நீடித் திருக்கிறது?—ஒரு வேளை கமலாகரன் கூறியது பொய்யா யிருக்குமா? கமலாகரன் பொய் யுரைக்கமாட்டான். அதுவுமன்றி, எனது கண்மணி இங்கு வருவது உண்மையா யிராவிட்டால் ஏன் ஓர்விதமான அடக்கக்கூடாத மனவெழுச்சி எனக்கிப்பொழுது உண்டாகிறது? எனது வலது கண் துடிக்கிறதே! என் காதலி வருவாளென்பதற்குச் சந்தேகமில்லை. இதோ சாவித்திரி! இதோ சாவித்திரி! சீச்சீ!—உருவெளித் தோற்றம்! ஐயோ! இம்மாதிரி நான் இன்றிரவு இதுவரையில் எத்தனை முறை ஏமாந்தேன்! என தாசைக் கற்பகமே! உண்மையில் பாவி என் கண்களுக்கு முன்பாக எப்பொழுது வந்து நிற்கப்போகிறாயோ? ஐயோ! என் காதற்கிளி இவ்விடத்திற்றானே இரண்டு மூன்று நாட்களாகவந்து என்னை நினைந்து வருந்தி அழுதனள்! அவளுடைய அழுகுரலைக் கேட்டிரங்கியே இம் மரங்களிலுள்ள இலைகளெல்லாம் இவ்வாறு வாடியிருக்கின்றன; ஆயினும் இவைகள் குளிர்ந்துமிருக்கின்றன. அவளுடைய பார்வையைப் பெற்றதனால் இவ்வாறு குளிர்ந்தனவோ? இலைகளே, நீங்கள் செய்த புண்ணிய மது! பளிங்குக் கல்லே, நீ செய்த பாக்கியமே பாக்கியம்! சாவித்திரியினுடைய பாதம் உன்மீது பொருந்தப் பெற்றனையே! இதோ சாவித்திரியினுடைய அடிச்சுவடுகள்! இம்மண் பெற்றபேறும் நான் பெறவில்லை.—ஆ! சாவித்திரியா அது? இல்லை, இல்லை, ஐயோ என் கண்மணி ஏன் இன்னும் வரவில்லை? நெடுநேர மாய் விட்டதே; கண்ணே, நான் உனக்குச்செய்த அபராதத்திற்காக என்னை இவ்விதம் வருந்தச் செய்கின்றனையோ? என்மீது அருள்புரிந்து இன்றைத்தினம் சீக்கிரம் வரலாகாதா? சாவித்திரி நான் அவளுடைய வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண் டிருக்கிறேனென்பதை

அறியாள்; அறிந்திருப்பாளாயின் இந்நேரம் வருந்திருப்பாள். சந்திரன் உச்சியில் வந்துவிட்டான்; அர்த்த ஜாமமாயிருக்கும். ஓஹோ! என் கண்மணி வருகிருள்போலிருக்கிறது! என் கண்ணிற்குப் புலப்படாவிட்டாலும் என் மனத்தினுள்ளே ஏதோ ஒன்று அவள் வருவதாகக் கூறுகிறது—சந்தேகமில்லை; அதோ அவளுடைய மெல்லிய பாதத்தின் சப்தம் கேட்கிறது. சிறிதுபொழுது என் காதலை அடக்கிக்கொண்டு இச் செடி மறைவிலிருந்து என் காதலி என்ன செய்கிருளெனக் கண்டு மகிழ்கிறேன்.—அன்னையே, எல்லாம் உமது கருணை! [ஓர் புறமாக மறைந்து கொள்கிருர்.]

சுலோசனை நான்கு புறமும் சுற்றிப் பார்த்துக்கொண்டு மெல்ல வருகிருள்.

சு. சீ, இக் காதலை நான் அடக்கிவிடவேண்டும். இதனுல் நான் ஒரு பிரயோஜனமுமடையப் போகிறதில்லையே! ஆயினும், இது தவறென்று எனக்குத் தெரிந்திருந்தும், இதனை மறக்க என்னுலாகவில்லையே! நான் எவ்வளவு அடக்கமுயன்றும் இது மேன்மேலும் விர்த்தியாகிறதே ஒழிய குறைவுபடவில்லை! ஐயோ! நான் இளவரசர் மீது காதல் கொள்ளுதல் முறையோ? அவரோ சக்ரவர்த்தியின் குமாரர், நானே ஓர் அற்பப் பாங்கி!—ஒரு அற்பப் பாங்கி! [பெருமூச் செறிகிருள்.]
ஐயோ! நான் இன்னுளென்று வெளியிடவா?—வீண் யோசனை! நான் வெளியிடுவேனுயின் என் உயிர் போய் விடும் ஐயோ! நான் பிறந்ததென்ன, வளர்ந்ததென்ன! —சீ, அவைகளையெல்லாம்பற்றி இப்பொழுது விசனப்பட்டென்ன பயன்? நான் இப்பொழுது பாங்கி பாங்கி தான்; ஓர் அற்பப் பாங்கி சக்ரவர்த்தியினுடைய குமாரன் மீது காதல் கொள்வதைவிட, இதோ ஆகாயத்தில் பிரகாசிக்கும் சந்திரன்மீது காதல்கொண்டு அதனைப் பெற விரும்பலாம். இதிலாவது சற்று பிரயோஜன

முண்டு; இச் சந்திரனுடைய கிரணங்களாகிலும் என் மேனியிற்படுகின்றன; இளவரசர் என்னைக் கண்ணெடுத்தும் பார்க்கப்போகிறதில்லை. ஆயினும் அன்றைத்தினம் இப் பூஞ்சோலையில் அவர் காணுமற்போன இக் கைவளையலை எனக் கணிந்தபொழுது அவர் என்னை நோக்கின நோக்கை என்னென்று சொல்வேன்! அதை நினைக்கும்போதெல்லாம் எனக்கு என்னையு மறியாத ஓர்வித சந்தோஷ முண்டாகிறது. ஐயோ! மறுபடியும் அவ்வாறு என்னை என் காதலர் நோக்கப் போகிறாரா? ஆ! அவருடைய கரமானது என் மேனியில் அன்று பட்டபொழுது எனக் குண்டான பேரானந்தத்தை யென்னென் றுரைப்பேன்! என்னுடலெல்லாம் பூரித்தது; இச் சுகத்தை நினைந்து நினைந்தன்றோ இவ்விரண்டு மூன்று நாட்களாக நான் உயிர் வாழ்ந்து வருகிறேன். அவருடைய உருவமும் ஞாபகமும் என் மனத்தை விட்டொரு க்ஷணமேனும் அகலவில்லையே! என்னைப் பற்றி அவர் மறந்தாயினும் நினைக்கிறாரோ?—அவரைப் பற்றி நா னிவ்வாறு நினைத்தல் முறையோ? ஏன் நினைக்கலாகாது? என்னை அவர் விவாகஞ் செய்துகொள்ளாவிட்டாலும், எப்பொழுது நான் அவர்மீது காதல் கொண்டேனே அப்பொழுதே நான் அவருடைய பத்னியாய்விட்டேன்.—என் காதலர் சித்திரரேகா தேவியிடம் அன்று தான் விவாகம் செய்துகொள்வதாக ஏற்றுக் கொண்டன ரன்றோ? ஆ! இவரைத் தன் கணவனுகப் பெறுபவளுடைய பாக்கியமே பாக்கியம்! அப் பாக்கியம் எனக்குக் கிட்டப் போகிறதோ? முடவன் கொம்புத் தேனுக் காசைப்படுவதுபோலும். எப்படி யிருந்தபோதிலும் இது நிச்சயம்,—இளவரசருடைய காதலையாவது பெறுவேன், அல்லது என துயிரையாவது துறப்பேன்; இந்த ஜன்மத்தில் இவரை நான் பெறுவேனென்பது அசாத்தியம்; மறு ஜன்மத்திலாவது இவருடைய காதலைப் பெற நான் தவ மிருக்கவேண்டும்.—வீண் எண்ணம்!

எல்லாம் ஈசன் விதிப்படியாகிறது; நம்மாலென்ன ஆகும்? —ஈசனே ஈசனே! வழக்கப்படி என் காதலருடைய படத்தையாவது பார்த்துச் சந்தோஷித்து இன்றிரவைக் கழிக்கிறேன்.

[தன் ஆடையினின்றும் ஸ்ரீதத்தருடைய படத்தை வெளியி லெடுத்து]

காதலரே, உம்மை நான் நேராக முத்தமிடக் கொடுத்து வைக்காமற் போனாலும் உமது படத்திற்காவது முத்த மிடுகிறேன்.--ஐயோ! என் காதலர் அன்றைத்தினம் சாயங்காலம் தன் யோகித் துகிலைக் களைந்து சிறந்த ஆடையாபரணங்களை அணிந்துக்கொண் டிருந்ததை, அவருடைய தாயாருடன் பேசிக்கொண் டிருக்கும் பொழுது நான் கதவின் ஓரமாய் நின்று கண்டபின், இப் படத்தைப் பார்க்கவும் என் மனம் எழவில்லை. இதனை எழுதியவன் பெரு மூடனா யிருக்க வேண்டும். சித்த ஜனவென்ற அவருடைய உருவில் பதினாயிரத்தி லொரு பங்கில்லையே இது!—இதென்ன எனது இடது தோள் படபட வென்று துடிக்கிறது? எனக் கிப்பொழுது பெரும் நன்மை யொன்று நேரும்போல் தோன்றுகிறது. என் கோரிக்கை இப்பொழுது நிறைவேறு மென்று ஏதோ எனக்குள் சொல்கிறது. என் காதலரை நான் இப்பொழுது அடையப்போகிறேனோ என்ன?—ஐயோ, என் காதலரை நான் என்று எனக் கெதிராக நேரில் காணப் போகிறேன்? காதலரே, உமக்குச் சிறிதேனும் இரக்க மில்லையோ? என்னுடைய பேதை மனத்தை இவ்வாறு தாம் கலக்க லாமோ? நான் உம்மை அதிக மாய்க் கேட்கவில்லை; என் எதிராக வந்து "கண்ணே! நீ என்மீது காதல் கொண்டிருப்பதைப்போலவே நானும் உன்மீது காதல் கொண்டிருக்கிறேன்" என்று கூறி, ஒருமுத்தம் தருவீராயின், பிறகு என்னைப்போன்ற பாக் கியசாலிகள் இவ் வுலகி லிருப்பாரோ? பிறகு நான் இறந் தாலும் பெரிதல்ல. ஐயோ! இத் தென்றல் வீசுவதற்

கும், இவ் வழகிய புஷ்பங்கள் புஷ்பித்து மணங் கமழ்வ தற்கும், இந் நிலவு காய்வதற்கும், ஐயோ! என் காதலர் என் கண்முன் வருவாராயின்—ஹா! காதலரே!—

[ஸ்ரீதத்தர் தன் மறைவிடத்திலிருந்து வெளியே வந்து சுலோசனையை யணைத்து முத்தமிட்டு அப்படியே ஸ்தம் பித்து நின்று விடுகிருர். சுலோசனை ஸ்ரீதத்தருடைய கரங்களைத் தன்மீதினின்றும் மெல்ல எடுத்துவிட்டுச் சற்றொதுங்கித் தலை குனிந்து நில நோக்கி நிற்கிருள். இத் தருணத்தில் லீலாவதி அகஸ்மாத்தாய் கதலிக் கிருகத்தின் பின்புறம் வருகிருள்; வந்து இவர்களைக் கண்டதும் இடி விழுந்தவள்போல் சற்று நேரம் அசைவற்று நின்று, பிறகு சிறிது தெளிந்து, மறைந்திருந்து இவர்கள் பேசிக்கொள்வதை யெல்லாம் கேட்கிருள்.]

ஸ்ரீ. என் கண்ணின் கருமணியே! சற்று முன்பாக நான் உன் எதிரில் வந்து நீ என்மீது காதல்கொண்டிருப்பது போல வே நானும் உன்மீது காதல்கொண் டிருக்கிறேனென்று கூற லாகாதா வென் றல்லவோ கோரினை; நான் அவ வாறு கூறப்போகிற தில்லை; என் காதற் கிளியே, நீ யென் மீது கொண்டிருக்குங் காதலைவிட நா னுன்மீது பதி னுயிர மடங்கு அதிகமாய்க் காதல்கொண் டிருக்கிறேன்!

சு. பிராண—அரசே, தாங்கள் ஏது—இங்கே வந்த திப் பொழுது?

ஸ்ரீ. கண்ணே, நான் அவ்வளவு பாபியோ? உன்னு டைய வாயால் என்னைப் பிராணநாதா வென் றழைக்க லாகாதோ? பிராணநாதா என்று கூறவந்தவள் திடீ ரென்று நிறுத்திவிட்டனையே! அதுவும் என்னுடைய பாக்கியம்!—என் காதலியே, நீ எல்லா மறிந்திருந்தும் நான் ஏதிங்கே வந்தது என்று கேட்கிறாயே! இதற்கு முன்னமேயே ஏன் வரவில்லை யென்று கேட்டிருப்பா யா யின் அது பொருந்தியதா யிருக்கும். நானிந்த இரண்டு மூன்று தினங்களாகப் பட்ட வருத்தம் உனக்குத் தெரிந் திருக்கு மாயின் அப்படிக் கேட்டிருக்கமாட்டாய்!— என தாருயிரே, உன்னை அன்றைத்தினம் பூஞ்சோலையில்

கண்டதுமுதல் என் கண்கள் நித்திரை யென்பதையே அறியா திருக்கின்றன !

சு. பிராண—நாதா, அது முதல் நா னும்மை—நினைத்து வருந்தியது போல்—அவ்வளவு நீர் என்னை நினைத்து—வருந்தி யிருக்கமாட்டீர்.

ஸ்ரீ. கண்ணே, அப்படியே யிருக்கட்டும் ; ஆயினும் அதைப் பற்றி நாம் இப்பொழுது யோசிப்பானேன் ? நாமிருவரும் ஒருவருடைய காதலை யொருவர் பெற்றோம் ; இனி நாம் பட்ட வருத்தங்களை யெல்லாம் மறந்து விடுவோம் ; கண்மணி, வெயிலி லடிபட்டவர்களுக்கே நிழலி னருமை தெரியும். என தின்னுயிரே, நீ யுன் மெல்லிய பாதம் வருந்த நிற்பதைப் பார்க்க என் மனம் தாளவில்லை ; இப்படிச் சற்றுட்கார். நானல்லவோ நிற்கவேண்டும்.

சு. பிராணநாதா, நீ ருட்கார்ந்தா லொழிய நான் உட்காரேன்.

ஸ்ரீ. கண்ணே, உத்தரவுபடி.

[பளிங்குக் கல்லின்மீது இருவரும் உட்காருகிறார்கள்.]

என தின்னுயிர்க் கற்பகமே, உனது காதலைப் பெற்ற நான் அடைந்த பேறு யார் பெறப்போகிறார் இவ்வுலகில்? நான் செய்த பாக்கியமே பாக்கியம்! ஒருவன் ஒரு நற்குண மமைந்த பெண்ணின்மீது உண்மையான காதல் கொள்ள, அப் பெண்ணும் அவன்மீது அவ்வாறே காதல் கொள்வாளாயின், பிறகு அவன் இவ்வுலகில் பெறவேண்டிய தென்னவிருக்கிறது ?— கண்ணே, என்ன யோசிக்கிறாய் ?

சு ஒன்று மில்லை பிராணநாதா.

ஸ்ரீ. கண்மணி, என்னிடங் கூற லாகாதா ?

சு. பிராணநாதா, உம்மிடங் கூறாது நான் வேறு யாரிடங் கூறப்போகிறேன் ? அரசே, நீரோ சக்ரவர்த்தியினுடைய குமாரர், நானோ— ஓர் அற்பப் பாங்கி ; அப்படி யிருக்க

நா மிருவரும் ஒருவர்மீ தொருவர் காதல்கொள்வது முறையோ ?

ஸ்ரீ. கண்ணே, இதையோ யோசித்தாய்? மெய்க்காத லென்ப தின் மகிமையை நீ யறியாய். காதல் இவைகளை யெல்லாங் கடந்தது; அதற்குச் சக்ரவர்த்தி யென்றும் பாங்கி யென்றும் பேத மில்லை. நீ பாங்கியா யிருந்தா லென்ன? எப்பொழுது நா னுன்மீது காதல் கொண்டேனே அப்பொழுதே நீ எனக்கு இம் மூவுலகங்களி னுள்ள பெண்களுக் கெல்லாம் உயர்ந்தவளாய் விட்டாய். இவ் வுலகினுள்ள அழகிகளை யெல்லாம் ஒரு புறம் கும்பலாக நிறுத்தி, உன்னை ஒரு பக்கம் நிறுத்தி, இவ் விரண்டி லொன்றைக் கோரும்படியாக எனக்குச் சுவாமி கட்டளையிடுவா ராயின், என் காதற்கிளியே, உன்னையே கோருவனன்றோ? அதுவு மன்றி நீ பாங்கியா யிருந்தும் உன்னிடம் ராஜஸ்திரீகளுக் குரிய உத்தம லட்சணங்கள் அமைந்திருக்கின்றன.

சு. பிராணநாதா, உம்முடைய காதலைப் பெறுதற்கு நான் பாத்திரவமானவ ளல்ல வென்று தோற்றுகிற தெனக்கு.

ஸ்ரீ. என தாருயிர்ப்பிழம்பே, நீயோ பாத்திரவமானவ ளல்ல? கண்ணே, உனது மகிமை உனக்குத் தெரியாது; இவ் வுலகில் உன்னைப்போல் எனக்கு இன்பத்தைத் தரும்படி யானவள் வேறொருத்தி யிருப்பாள் என்று நீ கனவிலும் நினைக்கவேண்டாம். கண்மணியே, உன்னைப் பார்த்தலே எனக்குப் பேரானந்தமுண்டாக்குகிறது; உன தினிய குரலைக் கேட்பதினால் எனக்குண்டாகும் பரவசம் சொல்லி முடியாது! உனது மெய்யைத் தீண்டுவதினால் எனக்குண்டாகும் பேரின்பமோ! அதைக் கூற ஆதிசேஷன் தான் வரவேண்டும்! என்னால் கூறி முடியாது! தெய்வ லோகத்திலுள்ள அமிர்தமும் ஒரு பொறிக்கே சுவை யளிக்கும்; நீயோ என தைம்பொறிகளுக்கும் பேரின் பத்தை விளைவிக்கிறாய். உன்னை லன்றி வேறொரு ஸ்திரீ

யால் எனக்குப் பெருமகிழ்ச்சி உண்டாக்க முடியுமென்று கனவிலும் நினைக்கவேண்டாம். என் காதற்கிளியே, நானன்றோ உனது காதலைப் பெறத்தக்கவனன்று.

சு. பிராணநாதா, அப்படி ஒருகாலும் இல்லை. என்னைக் கண்டாலன்றோ உமக்குச் சந்தோஷ முண்டாகிறதென்றீர்; நான் உம்மைப்பற்றி நினைத்தாலும் எனக்கு அடங்காத இன்ப முண்டாகிறது.—ஆயினும் பிராணநாதா, நீரோ சக்ரவர்த்தியின் குமாரர், நானோ பாங்கி; நீர் என்மீது எப்பொழுதும் காதல் குன்றா திருப்பீரென்கிற நிச்சயம் என்ன?

ஸ்ரீ. கண்ணே! கண்ணே! நீ இதை உன் வாயால் கூறுவது தர்ம மன்று! எனக்கோ உன்மீதுள்ள காதல் குன்றும்? அதைவிட இக் கிழக்கில் உதிக்கும் சூரியன் வடக்கில் உதிப்பானென்று நினை! கண்மணி, உன்னைக் கண்டபின் நான் வேறொரு ஸ்திரீயைக் கண்ணெடுத்துப் பார்ப்பேனோ? நீ என் மனதைப் பரிசோதிக்கும் பொருட்டு இவ்வாறு கேட்கிறாயோ? உன் மனதில் கிஞ்சித்தேனும் ஏன் சந்தேக மிருக்கவேண்டும்; நான் சொல்வதைக் கேள்; என தாசைக் கற்பகமே, இந்த ஜன்மத்திலாவது வேறு ஜன்மத்திலாவது இப்பொழுது எனக் குன்மீ திருக்கிற காதல் அணுவளவேனும் குறைந்தபோதிலும், அல்லது உன்னையன்றி வேறெந்த ஸ்திரீயையாவது நான் மணம் புரிந்தாலும், எனது தாயாருக்கு நான் துரோகம் நினைத்தவனாவேன்!

சு. பிராணநாதா, உமது மனத்தைப் பரிசோதித்ததற்காக என்னை மன்னிக்கவேண்டும்; நீர் இப்பொழுது கூறியதற்குக் கைம்மாறு நான் என்ன செய்யப் போகிறேன்! பிராணநாதா, நான் கூறுவதைக் கேளும்; இப் பிறப்பிலாவது வேறு எப்பிறப்பிலாவது எனக்கு உம்மீதுள்ள காதல் கிஞ்சித்தேனும் குன்றுமாயின், நான் மீளாத நரகத்திற்குச் செல்லக் கடவேன். நான் எப்படியாவது

தவஞ்செய்து எந்த ஜன்மத்திலும் உம்மையே எனது பிராணநாதராகப் பெறுகிறேன் பாரும். ஆயினும் பிராணநாதா, எனக்கொரு சந்தேகம்; எப்பிறப்பிலும் என்னையே நீர் மணஞ்செய்து கொள்வதாகக் கூறினீரே அது சாத்தியமான காரியமோ?

ஸ்ரீ. அஞ்சுகமே, நாம் கொண்டிருக்குங் காதலின் பெருமையை நீ யறியாய்; நாம் ஒருவர்மீ தொருவர் காதல்கொண்டிருப்பது ஒருவருடைய உடலை ஒருவர் கண்டு ஆசைப்படுவதன்று. அது கேவலம் மோகமாம். நாம் காதல் கொண்டிருப்பது நம் மிருவருடைய உயிரும் ஒன்றாய் ஐக்கிய மாதலே யாம். எந்த க்ஷணம் நாம் ஒருவர்மீ தொருவர் காதல் கொண்டோமோ, அப்பொழுதே நமதுடல் இரண்டா யிருந்தபோதிலும் ஆவி ஒன்றே யாயிற்று. அப்படி ஒன்றான ஆவியை இரண்டாகப் பிரிக்க இனி அயனலு மாகாது! இனி எப் பிறப்பிலும் நாம் பிரியோம்.

சு. ஆம், பிராணநாதா; நீர் கூறுவ துண்மையே. சற்று முன்பாக எங்கு என்னை மறு பிறப்பில் விட்டுப் பிரிகிறீரோ என்று வருந்தி யிருந்தேன்; இப்பொழுது அந்தச் சந்தேகமும் நீங்கிவிட்டது. பிராணநாதா, உம்முடைய காதலைப் பெற்ற என்னைப் போன்ற பாக்கியசாலிகளும் இவ்வுலகில் இருக்கிறார்களோ?—பிராணநாதா, நெடுநேரமாய்விட்டதே, நாம் அரண்மனைக்குப் போகவேண்டாமா? எனக் கொன்றும் அவசர மில்லை; இரவெல்லாம் இப்படியே கழித்துவிட்டாலும் எனக்குச் சந்தோஷந்தான்! ஆயினும்.—

ஸ்ரீ. நீ சொல்லுவது எனக்குத் தெரிகிறது; ஆயினும் இன்னுங் கொஞ்ச காலம் இந்த நந்தவனத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டுப் பிறகு போவோம்.

சு. அப்படியே செய்யலாம், பிராணநாதா.

[இருவரும் பூந்தோட்டத்தைச்சுற்றி உலாவி வருகின்றனர்.]

பிராணநாதா, நாம் சந்தோஷப்படுவதைப் பார்த்து இப் புஷ்பச் செடிகள் முதலியனவும் சந்தோஷப்படுகிறாற் போல் தோன்றுகிற தெனக்கு.

ஸ்ரீ. என் காதற்கிளியே, நா மிருவரும் ஒருவர்மீ தொருவர் காதல் கொண்டிருப்பதை இப்பொழுதே எல்லோருக்கும் ஒரு காரணம் பற்றி வெளியிட லாகாதென்று தோற்றுகிற தெனக்கு. ஆதலால் நான் உனக்கு விடை யளிக்கு மளவும் இதைப்பற்றி ஒரு வார்த்தையும் நீ ஒருவரிடமுங் கூறாதே,

சு. அப்படியே, பிராணநாதா.

ஸ்ரீ. கண்ணே, நான் உன்மீது கொண்டிருக்கும் மெய்க் காதலுக்கு அடையாளமாக இதோ உனது விரலில் இக் கணையாழியைப் போடுகிறேன்; இதை நீ என்னைப்போல வே பாவித்திருக்க வேண்டும்; உனது விரலை விட்டு எந்தச் சமயத்திலும் நீ கழற்ற லாகாது; ஞாபக மிருக்குமா கண்ணே? இன்னும் சிலகாலம் வரையில் இதை மறைவாக அணிந்துகொண் டிரு.

[தன் விரலி லிருக்கும் ஓர் மரகத மோதிரத் தைச் சுலோசனையின் விரலில் அணி கிறார்.]

சு. அப்படியே, பிராணநாதா; நீரும் என் காதலுக்கு அடையாளமாக இம் மோதிரத்தை யணிந்துகொண் டிரும்.

[தன் விரலிலிருக்கும் ஓர் மாணிக்க மோதி ரத்தை ஸ்ரீதத்தர் விரலில் போடுகிறாள்.]

ஸ்ரீ கண்ணே! கண்ணே!—

[ஸ்ரீதத்தர் ஓர் ரோஜாப் புஷ்பத்தைப் பறிக்கிறார்.]

சு. பிராணநாதா, அந்த ரோஜாப்புஷ்பம் எவ்வளவு அழகா யிருக்கிறது; அதை எனக்குத் தாரும்.

ஸ்ரீ. அதற்குப் பதிலாக எனக் கென்ன தருகிறாய்?

சு. என்ன வேண்டு மென்றாலுந் தருகிறேன், நானே உம் முடையவ ளாய்விட்டேன் ; இப்படிக் கொடும் அதை.

ஸ்ரீ. கண்ணே, இவ் வுலகில் எல்லாவற்றைப் பார்க்கிலும் எனக்கு மிகுந்த இன்பத்தைத் தரும்படியானதை நீ யெனக்குக் கொடுப்பாயாயின், நான் இப் புஷ்பத்தை உனக்குத் தருவேன்.

சு. [ஸ்ரீதத்தருக்கு ஓர் முத்தங் கொடுத்து] இப்பொழுது தாரும்.

ஸ்ரீ. கண்ணே, உன் புத்திக்கு மெச்சினேன், இதோ.

[அந்த ரோஜா புஷ்பத்திற்கு முத்தமிட்டு ஏற்றுக்கொள்ளும்படி சுலோசனைக்குக் கொடுக்கிறார்.]

சு. எனக்கு வேண்டாம் இப் புஷ்பம் !

ஸ்ரீ. ஏன் கண்ணே ?

சு. நீர் ஏன் அதற்கு முத்தமிட்டீர் ? அதைப் பார்த்தால் எனக்குப் பொறாமையா யிருக்கிற திப்பொழுது.

ஸ்ரீ. காதற்கிளியே, இதற்கோ நான் முத்த மிட்டேன் ? இதை உனக்கு கொடுக்கவந்தபொழுது இதற்கு முத்தமிட்டது உன்னைக் கருதியே யாம் ; அது உனக்கு முத்த மிட்ட தற்குச் சமானமே யாம் ; அப்படி யுனக்குச் சந்தேக மிருக்குமாயின் இதோ உன் அதரத்திற்கு முத்த மிடு கிறேன் ; இப்பொழுது சரிதானா ?

[சுலோசனை அப் புஷ்பத்தை வாங்கிக் கொண்டு தன் தலையில் அணிந்து கொள்ளுகிறாள் ; அது அகஸ்மாத்தாய் கீழே விழுந்து விடுகிறது.]

சு. பிராணநாதா, நான் உமக்கொரு புஷ்பந் தருகிறேன், இதோ.

[சுலோசனை ஸ்ரீதத்தருக்கு ஒரு புஷ்பம் கொடுக்க அதை அவர் ஏற்றுக்கொள்ளு கிறார்.]

ஸ்ரீ. கண்ணே, அரண்மனையினருகில் வந்துவிட்டோம். இனி நாம் பேச லாகாது; யாராவது நம்மைப் பார்த்துவிடு வார்கள்.

சு. ஆம், பிராணநாதா, நான் உம்மை மறுபடியும் எப்பொழுது காண்பது?

ஸ்ரீ. நாளைத்தினம் காலை ஐந்து நாழிகைக்கு நான் உன்னைக் காண்கிறேன். இனி நாம் பேசலாகாது

[இருவரும் போகிறார்கள்.]

லீ. [மறைவிடத்திலிருந்து வெளியே வந்து] நான் கண்ட தவ்வளவும் கனவோ? மனப் பிரமையோ? இல்லை, இல்லை! —ஆஹா! தந்தவக்கிரனும், துன்மதியும் இன்னும் உயிரோடிருக்கிறார்களல்லவா?—என்ன ஆச்சரியம்! நாம் ஒருவாறாய் முடியுமென்று நினைக்கத்தெய்வம் ஒருவாறாய் முடித்து வைத்ததே! இதில் ஆச்சரியமொன்று மில்லை; உலக வின்பத்தை யெல்லாம் துறந்திருந்த ஸ்ரீதத்தராஜனையே மயக்கித் தன் மோக வலைக்குள் அகப்படச் செய்தவள் அத் திருட்டுப் பயல்களை ஏமாற்றி அவர்களிடமிருந்து தப்பித்துக்கொண்டது ஆச்சரியமோ? ஆஹா! சுலோசனை! நீ இவ்வளவு கெட்டிக்காரி யென்று நான் கனவிலும் நினைக்க வில்லை. உனது புத்தி சாதுர்யத்தையெல்லாம் நான் சீக்கிரம் அறிகிறேன்!—நான் சுலோசனை இறந்தாளெனக் கருதி, ஸ்ரீதத்தராஜனை மணம் புரிய இங்கு வருவதென்ன, இங்கு சுலோசனையும் ஸ்ரீதத்தராஜனும் ஒருவரை யொருவர் கட்டிக்கொண்டு முத்தமிட்டுக்கொண் டிருப்பதை நான் காண்பதென்ன! என் மனம் அப்பொழுது எவ்வாறு பதறியது! இவர்கள் பேசிய ஒவ்வொரு வார்த்தையும் என் காதில் நாராசம் போல் நுழைந்ததே! இவர்கள் முத்த மிட்டுக்கொள்ளும் பொழுதெல்லாம் எனது உடலை இரு பிளவாகப் பிளப்பதுபோ லன்றோ விருந்தது! எத்தனை முத்தம்!—சீச்சீ! சுலோசனை, உனக்கு நாண மென்பது சிறிதேனு மில்லையோ? இந்த ஜன்மத்தில் மாத்திரம் ஸ்ரீதத்தர் இவளை விவாகஞ் செய்துகொண்டால் போதாதாம், எந்த ஜன்மத்திலும் அவர் இவளையே விவாகஞ்செய்து கொள்ள வேண்டுமாம்; இவளுடைய பேராசையைப் பார்! ஆஹா!

சுலோசனா! முதலில் இந்த ஜன்மத்தில் அவர் உன்னை விவாகஞ் செய்து கொள்ளுகிறாரா என்று பார்த்துக் கொள்! நான் லீலாவதி யென்பது உண்மையானால் இன்னும் இரண்டு மூன்று தினங்களுக்குள்ளாக உங்களிருவரையும் பிரித்து நீ உயிருட னிருக்கும் பொழுதே உன் காதலனை நான் மணம்புரிகிறேன் பார்! ஏதோ நம்மைக் கண்டு மயங்கிவிட்டார் நம்மையே விவாகஞ்செய்து கொள்வதாகச் சத்தியம் செய்து விட்டாரென்று சந்தோஷப்படாதே! எனக்கு முன்பாக நீ எவ்வளவு? என்னை இன்னும் இளவரசர் பார்க்க வில்லை என்னை ஒருகால் பார்ப்பாராயின் பிறகு உன்னைக் கனவிலும் நினைப்பா ரென்பதை மறந்துவிடு. இதோ அவர் உனக்குக் கொடுத்த ரோஜாபுஷ்பம்!

[அதைக்கோபத்துடன் மிதிக்கிறாள்.]

இதை இப்பொழுது அழிக்கிறதுபோல் உன்னையும் நான் சீக்கிரத்தில் அழிக்கா விட்டால் என் பெயர் லீலாவதி யன்று! அப்பொழுதே உன்னைக் கொன்றுவிட் டிருப்பேன், ஆயினும் இளவரசருக்காகப் பார்த்தேன்!—சீ! இந்தச் சுலோசனையோ இவ் வழகிய ராஜகுமாரனைக் கூடிச் சுகிக்கத் தக்கவள்? இவரைப் போன்ற ரூபலாவண்யமுடைய புருஷனை நான் இதுவரையில் கண்டதேயில்லை; இனி காணப்போகிறது மில்லையென்று நினைக்கிறேன்! இவருடைய அழகிற்கு என்னுடைய அழகே பொருந்தியது! இவரை விவாகஞ் செய்துகொண்டு சுகிக்காத ஜன்மம் என்ன ஜன்மம்? இவர் இப்பாவியுடன் கொஞ்சிப் பேசி முத்த மிடும்பொழுதெல்லாம் என் உள்ளம் எவ்வாறு பதறியது? ஆஹா! சுலோசனா, நீ சிறியவளா யிருந்தபொழுது "அக்காள், நீயும் நானும் எல்லா விஷயத்திலுமொன்று, உனக்கு வரும் நன்மை தீமைகள், எனக்கு வரும் நன்மை தீமைகளே." என்று கூறினையே அதினுண்மையை நானின்றே கண்டேன் அடி! இல்லாவிட்டால் இளவரசர் உன் அதரத்

தைக் கடித்தபொழுது என் உதடு ஏன் துடிக்கவேண்டும்? ஐயோ பாவம்! சுலோசனை! ஏன் என தின்பத்திற்குக் குறுக்காக வந்தனை? என தின்பத்திற்கும் எனக்கும் இடையில் வந்தவர்கள் இதுவரையிலும் ஒருவரும் பிழைத்ததில்லை; அற்பப் பெண்ணாகிய நீயோ தப்பித்துக் கொள்ளப் போகிறாய்?—அதெல்லாமிருக்கட்டும்; இப்பொழுது நான் செய்யவேண்டியதைப்பற்றி யோசித்துப் பார்க்கிறேன். சுலோசனை இங் கெப்படி வந்தாளோ தெரியவில்லை ஆயினும் அவர்க ளிருவரும் கூறிய மொழிகளில் சுலோசனை இன்னாளென்று ராஜகுமாரனுக்குத் தெரியாதுபோல் தோன்றுகிறது. ஆமாம்! சுலோசனை இங்கு ஓர் பாங்கியா யிருக்கிறாள்போ லிருக்கிறது. ஏன் இவள் தன்னுடைய உண்மையான ஸ்திதியை வெளியிடா திருக்கிறாள்? ஏதோ இதற்குக் காரணம் இருக்க வேண்டும். அம்மட்டும் நலம்தான். ஆயினும் இவளை எப்படியாவது சீக்கிரம் இவ் வரண்மனையைவிட்டு அனுப்பிவிட வேண்டும். இவளை நமது தாய் தந்தையர் காண்பாராயின் எல்லாம் கெட்டுவிடும்! பிறகு என்னுடைய எண்ணங்களெல்லாம் வீணாகிவிடும். இதற் கென்ன செய்வது?—சுலோசனையைக் கொன்றுவிடவா? நான் விரும்புவேனாயின் ஒரு க்ஷணப்பொழுதில் இவளை யமபுரத்திற் கனுப்பிவிடுவேன், ஆயினும், எப்படி யிருந்த போதிலும் என் கையால் இவளைக் கொல்வதென்றால் எனக்கு மனம் வரவில்லை—இவளை யெப்படியாவது இவ் வரண்மனையை விட்டு அகற்றிவிட வேண்டும்; இதற் கென்ன செய்வது? இந்தச் சங்கடத்தில் எனக்கே ஒரு யுக்தியும் தோற்றவில்லை!—

பிரதாபசீலர் லீலாவதிக்குப் பின்புறமாக வருகிறார்.

பிர. லீலாவதி!

லீ. [திரும்பி அவரைப் பார்த்து] ராஜகுமாரா!

பிர. ஏது இங்கே வந்தது?

லீ. நீர் ஏது இங்கே வந்தது ?

பிர. லீலாவதி, நான் வந்ததற்கு காரணஞ் சொல்லவா ?

லீ. சொல்லும்.

பிர. லீலாவதி, நான் உன்னைக் கண்டது முதல் விரக தாபத்தால் தவிக்கிறேன். உனது பேரழகைக் கண்டு மோஹங் கொண்டேன். இன்றிரவு உன்னை நினைந்து வருந்தியதனால் எனக்கு நித்திரையே வரவில்லை. இப் பூந்தோட்டத்தில் வந்து சற்றுலாவினால் ஒருவேளை நித்திரை வருமோவென்று இங்கு வந்தேன். தெய்வாதீனத்தால் உன்னைக் கண்டேன். பெண்ணரசே, என் னுயிர் உன் கையி லிருக்கிறது. எப்படியாவது என்மீ தருள் புரிந்து நீ என்னை மணம் புரியவேண்டும். இல்லாவிட்டா லென் னுயிர் போய் விடும்.

லீ. ராஜகுமாரா, நான் இளவரசரை மணம்புரியப் போகிறேனென்பது தெரிந்தும் நீ ரிவ்வாறு என்னிடம் கூறுவது நியாயமோ ?

பிர. லீலாவதி, அதைப்பற்றித்தா னுன்னிடங் கூறவந்தேன். இளவரசர் உன்னை ஒருகாலும் விவாகஞ் செய்துகொள்ளப் போகிறதில்லை. அவர் உன்னை மணம்புரிவ தில்லையென்று பிரமாணஞ் செய்திருக்கிறார். நாளைத்தினம் சபையில் மஹாராஜா கேட்கும்பொழுது என்ன விடையளிக்கிறா ரென்று நீயே கேள். அவர் உன்னை வெறுக்கும் பக்ஷத்தில் நீ என்னை மணம் புரிகிறாயா ?

லீ. எதோ பார்க்கலாம் ; நான் உறுதியாகக் கூறமுடியாது ; ஆயினும் நீர் என்மீது உண்மையில் ஆசைகொண்டிருக்கிறீரென்பது நிச்சய மென்ன ?

பிர. பெண்ணே, நீ யதைக் குறித்துச் சந்தேகப்பட வேண்டிய தில்லை. நீ காலா லிட்டதைக் கையாற்செய்யச் சித்தமா யிருக்கிறேன் வேண்டுமென்றால் என்னைப் பரிசோதித்துப் பார்.

லீ. ஏதோ பார்ப்போம்—ஆனல் ராஜகுமாரா, நீர் இன்றிரவு இங்கு என்னைக் கண்டதாக ஒருவரிடமுங் கூறலாகாது. நாளைத்தினம் உமது மனத்தை நான் பரிசோதிக்கிறேன், நாம் இங்கிருக்க லாகாது, போவோம்.

பிர. அப்படியே. [போகிருர்.]

லீ. [போகும்பொழுது தனக்குள்] இதுவும் நம்முடைய அதிர்ஷ்டந்தான். இவரை நமது கருவியாகக்கொண்டு நமதெண்ணங்களை நிறைவேற்ற வேண்டும்; வல்லவனுக்குப் புல்லுமாயுதம்; இவர் தக்க கருவிதான்—ஆயினும் இவர் கூறுவதெல்லாம் உண்மையா யிருக்குமா ? [போகிருள்.]

காட்சி முடிகிறது.

## மூன்ருவது காட்சி

இடம்—வாசவதத்தராஜனுடைய அரண்மனையில் சங்கீத மண்டபம். காலம்—காலை.

சித்திரரேகை, காந்திமதி, லீலாவதி, இம் மூவரும் உட்கார்ந்து கொண்டு வேடிக்கையாகப் பாடிக்கொண் டிருக்கிருர்கள்.

பத்மாக்ஷி மாத்திரம் ஓர் புறமாகச் சும்மா விருக்கின்றனள்.

வாசவதத்தரும் பராக்கிரமகேதுவும் வருகிருர்கள்;

எல்லோரும் எழுந்திருக்கிருர்கள்.

வா. சித்திரரேகா, இன்றைக்கு எட்டாவது தினம் விவாகத்திற்கு நல்ல நாளென்று புரோகிதர் முதலானோர் சொல்லுகிருர்கள். ஆகவே அன்றைத்தினம் நம்முடைய ஸ்ரீதத்தனுக்கும் லீலாவதிக்கும் விவாக முகூர்த்தத்தை நடப்பிக்க வேண்டுமென்று தீர்மானித் திருக்கிரும். அதைக் கூறவே நாங்களிங்கு வந்தோம்.

சி. மிகவும் சந்தோஷம்; அப்படியே செய்யலாம், தடையென்ன ?

பத். [வாசவதத்தர் அருகில் வந்து] ஐயனே, இளவரசர் இந்த விவாகம் தனக்குச் சம்மதிதானென்று ஏற்றுக்கொண்டாரோ ?

வா. ஏன் ? சித்திரரேகா, இதற்கு சம்மதிதான் என்று கூறினனென்றுயே ?

சி. ஆம், நான் கேட்டபொழுது அப்படியே ஆகட்டுமென்று கூறினன் ; அப்படி நமக்கு சந்தேகமென்னத்திற்கு ? தாங்கள் இப்பொழுது நேராக அழைத்துக் கேட்கலாமே ?

வா. யார் அங்கே ?

ஓர் தோழி வருகிறுள்.

தோ. மஹாராஜா !

வா. நீயா, நீ சென்றுல் உன்னைப் பார்க்கவுமாட்டானே !—நீ குணசேனனிடம் சென்று ஸ்ரீதத்தனை இங்கே சீக்கிரம் அழைத்து வரும்படி நான் கட்டளையிட்டதாகச் சொல்.
[தோழி போகிறுள்.]
லீலாவதி, நீங்களெல்லோரும் போகவேண்டியதில்லை, இங்கேயே இருங்கள்.

லீ. [ஓர் புறமாக மல்லிகைக்கு] இதுதான் சமயம், பத்மாக்ஷியுடன் பேசிப் பார்.

ம. [ஓர் புறமாக லீலாவதிக்கு] சரிதான்.
[பத்மாக்ஷி அருகிற் சென்று அவளுடன் பேசுகிறுள்.]

வா. லீலாவதி, உனக்கு இந்த விவாகம் சம்மதிதானு ?

லீ. மஹாராஜா, எனது தாய் தந்தையர்க்கு எது இஷ்டமோ அதுவே எனக்கும் இஷ்டம்.

வா. நன்றுய்க் கூறினுய் ! அதுவே நல்ல பெண்ணுக்கு அடையாளம்.

ஸ்ரீதத்தரும் குணசேனனும் முன்பு வருகிறார்கள்.
பிறகு தோழியும், பிரதாபசீலரும் வருகிறார்கள்;
ஸ்ரீதத்தர் வாசவதத்தரை மாத்திரம் வணங்கி நிற்கிறார்.

வா. ஸ்ரீதத்தா, இவர் யார் உனக்குத் தெரியாதோ? இவர் தான் உனது மாமனாராகப் போகின்றவர்.

ஸ்ரீ. ஐயனே, என்னை எதற்காக அழைத்தீர்?

வா. நீ சித்திரரேகையிடம் விவாகஞ் செய்துகொள்ளச் சம்மதிதான் என்று கூறினையாமே, அது உண்மைதானோ?

ஸ்ரீ. ஆம், உண்மைதான்.

லீ. [தனக்குள்] மனமே, அவசரப்படாதே.

வா. மிகவும் சந்தோஷம். உனக்கும் இதோ நிற்கும் பராக்கிரமகேதுவின் புதல்வி லீலாவதிக்கும் இதற்கு எட்டாம் நாள் விவாகஞ் செய்யத் தீர்மானித்திருக்கிறோம் அதைக் கூறவே உன்னை நா னழைத்தேன்.

ஸ்ரீ. ஐயனே, நான் விவாகஞ் செய்துகொள்ள ஏற்றுக்கொண்டது உண்மையே; ஆயினும்—பராக்கிரமகேதுவின்—பெண்ணை நான் விவாகஞ் செய்துக்கொள்ளுவதாகக் கூறவில்லையே.

வா. என்ன! என்ன!—

ஸ்ரீ. ஐயனே, நான் கூறிய வார்த்தையைப் பரிபாலிக்கிறேன்; நான் விவாகஞ் செய்துக்கொள்ளத் தடையில்லை; ஆயினும் நான் காதல்கொண்டிருக்கும் பெண்ணையே நான் விவாகஞ்செய்து கொள்வேனே யல்லாமல் வேறொருத்தியையும் மணம் புரியேன். என துயிருள்ளளவும் எனது காதலியையன்றி இந்த லீலாவதியையாவது வேறு எந்த ஸ்திரீயையாவது மணம் புரியேன்; இது சத்தியம். தாங்கள் வீணாக நிர்ப்பந்திப்பதிற் பயனில்லை.

வா. அடே! என்ன சொன்னாய்? எனக்கு அவமரியாதையா கொண்டுவரப் பார்க்கிறாய்? நீ காதல்கொண்டிருக்கும் பெண்ணை மணம் புரிவதாவது! நீ இந்த லீலாவதியைத்

தான் மணம் புரியவேண்டும். என்னுடைய கட்டளையை நீ மறுக்க உனக்குத் தைரியம் இருக்கிறதா ?—யார்மீது காதல்கொண் டிருக்கிருய் ? காதல் !—

ஸ்ரீ. ஐயனே, வீணாக நீர் என்மீது கோபம்கொள்வது நியாய மன்று; நான் என தெண்ணத்தைக் கூறிவிட்டேன்; பிறகு உம திஷ்டம்—குணசேனு, நான் அப்பொழுதே கூறி னேனே பார்த்தாயா ?—தந்தையே, தாங்கள் அவசரப் பட லாகாது ; இவ் விஷயத்தைப்பற்றி நான் தங்களிடம் சில விஷயங்கள் அந்தரங்கமாகப் பேசவேண்டும். நான் போய் வருகிறேன். [போகிருர்.]

வா. சித்திரரேகா ! அவன் சொன்னதெல்லாம் கேட்டாயே நீ ? இருக்கட்டும், இவனுடைய கர்வத்தையும் பிடிவாதத் தையும் அடக்கி, தானுக என் காலில் வந்து வீழ்ந்து இந்த லீலாவதியை மணஞ்செய்து கொள்ளுகிறேன் என்று சொல்லும்படி இவனை நான் செய்யாவிட்டால் நான் க்ஷத்திரிய னல்லன் !

பரா. வாசவதத்த ராஜனே, இளவரசருக்கு இஷ்டமில்லா திருக்கும்பொழுது தாங்கள் பலவந்தப்படுத்துவானேன்? எங்களுக்கு விடையளியும்; நாங்கள் இப்பொழுதே எங்க ளுடைய பட்டணத்திற்குத் திரும்பிச் செல்கிருேம். இப் படி இருக்குமென்று எனக்கு முன்பே தெரிந்திருக்கு மாயின் இங்கு நாங்கள் வந்திருக்கமாட்டோம்.

வா. பராக்கிரமகேது, அவசரப்படவேண்டாம், சற்று பொ றும், என் னிஷ்டப்படி என் குமாரன் நடப்பதோ அல் லது அவனிஷ்டப்படி நான் நடப்பதோ ? உமக்கு நான் வாக்களித்து உங்களையெல்லாம் இங்கு வரவழைத்தபின், இந்த விவாகத்தை நடத்தாமற்போவது எனக்கு மிகவும் அவமான மாகும். ஸ்ரீதத்தனை வழிக்குக்கொண்டு வரு கிற மார்க்கம் எனக்குத் தெரியும். தாங்கள் அவசரப் படவேண்டாம். சித்திரரேகா, இவர்களை யெல்லாம்

அழைத்துக்கொண்டு நீ அந்தப்புரத்துக்குப் போ.

[பத்மாக்ஷியும் ஓர் தோழியும் தவிர மற்றெல்லா ஸ்திரீகளும் போகிறார்கள்.]

பத். [தன் பிதாவின் காலில் வீழ்ந்து] ஐயனே, நான் உங்களை ஒன்று வேண்டிக்கொள்ளுகிறேன்; தாங்கள் வீணில் எனது தமயன்மீது கோபங் கொள்ளலாகாது அவருக்கு இஷ்டமில்லா திருக்கும்போது லீலாவதியை அவருக்கு மணம் புரிவதில் என்ன பிரயோஜனம்? நான் சொல்வதைச் சற்று கேளும்; பராக்கிரமகேது ராஜனுடைய மற்றப் பெண் சுலோசனையை இளவரசர் பார்ப்பாராயின், அவளை மணம்புரிய விரும்புவா ரென்பது நிச்சயம். அவள் துர்நடக்கை யுடையவளாய் எங்கேயோ ஓடிப் போய்விட்டாள் என்பதை நான் நம்பவில்லை. யாரோ பாபிகள் அவளுக்குத் தீங்கு நினைத்து அவளை யெங்கேயோ அபகரித்துச் சென்றிருக்கவேண்டும். ஆதலால் எப்படியாவது அந்தச் சுலோசனையைக் கண்டு பிடித்து இளவரசருக்கு மணம் புரியும்படி உம்மை யிரந்து கேட்டுக் கொள்கிறேன்.

வா. பத்மாக்ஷி, இதைப்பற்றி உனக் கொன்றுந் தெரியாது; போ அந்தப்புரத்திற்கு !— [தோழியைப் பார்த்து] பத்மாக்ஷியை உள்ளே அழைத்துக்கொண்டு போ.

[எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

# நான்காவது அங்கம்

## முதல் காட்சி

இடம்—அரண்மனையில் ஓர் அந்தரங்கமான அறை. காலம்—காலை.

சுலோசனையும் மல்லிகையும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கின்றனர்.

ம. சுலோசனா, உன்னுடைய நலத்தைக் கோரியே; உனக்குப் பிறரால் ஒரு தீங்கும் நேரிடாமுன் இவைகளை எல்லாம் உன்னிடங் கூற வந்தேன். அப்மட்டும் நான் உன்னை முதலில் கண்டது நல மாயிற்று. வேறு யாராவது பார்த்திருப்பாராயின் நீ இந்நேரம் இறந்திருப்பாய். மஹாராஜா நீ கெட்ட நடத்தை யுடையவளாய்ச் சோர நாயகனுடன் எங்கேயோ ஓடிப்போய்விட்டதாக எண்ணி, உன்னை யார் எங்கே பார்த்தபோதிலும் உடனே கொன்றுவிடும்படி கட்டளையிட் டிருக்கிறார். உன்னைக் கொல்பவர்களுக்காவது, அல்லது நீ யெங்கே ஒளித்துக்கொண்டிருக்கிறாயென்று கண்டறிந்து கூறுபவர்களுக்காவது, பதினாயிரம் பொன் தருவதாகப் பிரசித்தம் செய்திருக்கிறார். உனது நலத்தைக் கோராது அந்தப் பதினாயிரம் பொன்னுக்கு ஆசைப்பட் டிருப்பேனாயின், நீ இந்நேரம் யம புரத்துக்குப் போயிருப்பாய்—

சு. மல்லிகா, பிதா நினைக்கிற வண்ணம் நான் அப்படிப்பட்ட கெட்ட நடத்தை யொன்றும் உடையவ ளல்லவே. நான் அன்றைத்தினம் இரவு—

ம. அதெல்லாங் கூறி என்ன பிரயோஜன மம்மா? பிதாவோ நீ சோர புருஷனுடன் ஓடிவிட்டதாக உறுதியாக நம்பியிருக்கிறார். உன்னுடைய நியாயங்களை எல்லாம் அவர் கேட்கப்போகிறாரோ? அவருக்கோ உன்மீது அடங்காக் கோபம் மூண்டிருக்கிறது. உன்னைக் கண்டவுடன்

கொன்றுவிடப் போகிருர். அவருக்கு நியாயங்களை எடுத்துக் கூறுவது எங்கே? நான் உன்னுடைய வார்த்தைகளை நம்பியபோதிலும், நீ கூறுவது சாதாரணமாக நம்பத் தக்கதா யில்லை. இனி இங்கே ஒவ்வொரு க்ஷணமும் ஒரு கண்டந்தான் உனக்கு; என்னுடையகடனை ஒழித்து விட்டேனம்மா, இனி நீ உன்னுயிரைத் தப்பித்துக் கொள்ளும் வகையைத் தேடு.

[எழுந்து போவதுபோல் நடிக்கிருள்.]

சு. மல்லிகா, மல்லிகா! போகாதே! இரு, இரு!—ஐயோ, இந்தச் சங்கடத்திற்கு நான் என்ன செய்வது? ஐயோ, நான் இதற்குள்ளாக இறப்பதென்ருல் என் மனம் தாள வில்லையே, மல்லிகா, உனக்குக் கோடி புண்ணிய முண்டு, இந்தச் சங்கடத்தினின்றும் தப்புவதற்கு எனக்கு ஒரு மார்க்கம் கூறுவாயா?

ம. எனக்கு ஒரு மார்க்கமுந் தோற்றவில்லை; ஆயினும் நீ இந்த அரண்மனையினின்றும் ஒரு க்ஷணப்பொழுதுந் தாமதியாது புறப்பட்டு வேறு எங்கேயாவது போய் ஒளிந்திருக்கவேண்டுமென்று தோற்றுகிறது. மஹாராஜா தன் பரிவாரங்களுடன் இங்கு வந்திருக்கிருர். ஆதலால் இனி நீ இங்கு ஒரு க்ஷணமும் இருத்தல் சரியன்று. எப்படியும் உன்னை யாராவது கண்டுவிடுவார்கள். கண்ட பிறகு உன் கதி யென்னவென்று உனக்கே தெரியும்.

சு. ஐயோ! நான் இந்த அரண்மனையை விட்டா போகவேண்டும்? இதைவிட்டு நான் எங்கென்று போவது?—மல்லிகா, பிதா முதலானேரெல்லாம் எதற்காக இங்கு வந்திருக்கிருர்கள்?

லீலாவதி வருகிருள்.

லீ. [திடுக்கிட்டவள்போல் பாவித்து] ஹா! சுலோசனா!

ம. ஸ்! கூச்சலிட வேண்டாம்.

சு. [விரைந்தோடி லீலாவதியைக் கட்டிக்கொண்டு] அக்காள்! அக்காள்!

லீ. சுலோசனு! நீ இங்கெப்படி வந்தாய்? ஐயோ! இங்கு உன்னை யாராவது கண்டால் உன் உயிர் போய்விடுமே! மல்லிகா, மஹாராஜா கொடுக்கிறேனென்று பிரசித்தம் செய்த பதினுயிரம் பொன்னையும் நான் தருகிறேன்; சுலோசனை இங்கிருப்பதை மஹாராஜாவிடமாவது வேறு யாரிடமாவது வெளியிடாதிரு, உன்னை வேண்டிக் கொள்ளுகிறேன். மல்லிகா, இருவருடைய உயிரைக் காப்பாற்றியவ ளாவாய் நீ.

ம. இல்லை அம்மா, நான் பொன்னுக் காசைப்பட்டிருந்தால் இந்நேரம் சுலோசனை உயிரோ டிருப்பாளோ?

லீ. கண்ணே! அந்தமட்டும் நாங்க ளிருவரும் உன்னை முதலில் காணும்படி நேரிட்டது உனது தவப்பயனே; வேறு யாராவது உன்னைக் கண்டிருப்பாராயின் நீ இந்நேரம் இறந்திருப்பாய். நீ இறந்தபின் நான் உயிர் வாழ்வேனு? சுலோசனு, பிதா உன்மீது கோபங்கொண் டிருக்கிறது முதலான வெல்லாம் உனக்குச் சிறிதுந் தெரியாதுபோ லிருக்கிறதே!

சு. இல்லை, அக்காள், மல்லிகை என்னிடம் இப்பொழுது தான் எல்லாவற்றையுங்கூறினுள்; அக்காள், நான் என்ன செய்வது? பிதா நினைக்கிறபடி நான் ஒரு கெடுதியையும் செய்தவளல்லவே! [கண்ணீர் சொரிகிருள்.]

லீ. மல்லிகா, நீ சற்று அப்புறம் போயிரு; நான் பிறகு அழைக்கிறேன்—இதோ பார்! ஒருவரிடமும் இங்கு சுலோசனை இருப்பதை வெளியிடாதே! உன்னை வேண்டிக் கொள்ளுகிறேன்! [மல்லிகை போகிருள்.]
கண்ணே, நடந்த சமாசாரத்தைச் சொல்; நீ இங்கெப்படி வந்தாய்?

சு. அன்றைத்தினம் இரவு பிதாவும் அன்னையும் வந்து புத்திமதி கூறிவிட்டுச் சென்றுர்களே, ஞாபக மிருக்கிறதா?

அப்பொழுது நான் படுக்கை யறையில் நித்திரை போனதுதான் எனக்குத் தெரியும். நான் விழித்துக் கொண்டு பார்க்கும்பொழுது ஓர் பயங்கரமான காட்டின் மத்தியில் என் மஞ்சத்தின்மீது என்னை வளர்த்தி யிருக்கக் கண்டேன், பிறகு என்—இந்நாட்டு இளவரசர் அங்கு வந்து என்னை அழைத்துக்கொண்டு வந்து இங்கு விட்டார். அது முதல் என் பெயரை வெளியிடாது ஓர் அற்பப் பாங்கியைப்போல் இங்கு வேலைசெய்து வருகிறேன். அக்காள், இதுவே நடந்த விஷயம் வேறொன்றுமில்லை.— இதில் என்ன தவ றிருக்கிறது ?

லீ. கண்ணே, இதையென்னைக் கேட்கவும் வேண்டுமோ? பிதா நினைக்கிற வண்ணம் அப்படிப்பட்ட கெட்ட விஷயத்தை மனத்திலும் நினைத்திருக்கமாட்டா யென்பதை நான் அறியேனோ ? ஆயினும் இப்பொழுது நாம் என்ன செய்யலாம்? பிதாவோ அடங்காத கோபங்கொண்டிருக்கிறார் உன்மீது ; அவருக்கு இவ் விஷயங்களை யெல்லாம் விவரமாய் நான் தெரிவிக்குமுன், அவர் செய்திருக்கிற கொடுமையான கட்டளையை அறிந்திருக்கும் பொன் ஆசை கொண்ட பாவிகள் யாராவது உன்னைக் கண்டால் உன் உயிருக்குத் தீங்கு நேரிடும் ; அதைப்பற்றித்தான் இப்பொழுது நான் யோசிக்கிறேன்.—ஐயோ ! இதற்கென்ன செய்வது ?

சு. அக்காள், மல்லிகை என்னை இந்த க்ஷணமே அரண்மனையைவிட்டு வேறெங்கேயாவது போயிருக்கும்படி சொல்லுகிறாள்.

லீ. ஆம் ! அதுவும் ஒரு நல்ல யோசனைதான் ! சுலோசனா நான் சொல்வதைக் கேள், நீ இங்கிருக்கும் ஒவ்வொரு க்ஷணம் உனக் கொரு கண்டந்தான். ஆதலால் மல்லிகை சொல்லுகிறபடி உடனே இந்த அரண்மனையை விட்டுப் புறப்படவேண்டும் நீ. மல்லிகையிடம், உன்னை ஒருவருமறியாதபடி இவ் வரண்மனையினின்றும் வெளியில்

அழைத்துச் சென்று, மறைவான ஓர் இடத்தில் இரண்டு மூன்று நாட்கள் ஒளித்து வைத்திருக்கும்படி சொல்லுகிறேன். இதற்குள்ளாக நான் பிதாவிடம் சென்று உண்மையை வெளியிட்டு, கொஞ்சங்கொஞ்சமாக அவருடைய கோபத்தைத் தணித்து விடுகிறேன். பிறகு அவர் உன்னைக் காண்பாராயின் எல்லாம் சரியாய்விடும். இதோ நான் போய் மல்லிகையை அனுப்புகிறேன். கண்ணே, நீ இனி ஒரு க்ஷணமும் இங்கு தாமதிக்க லாகாது.

சு. ஐயோ! வேறு வழியில்லை!—அக்காள், அப்படியே செய்கிறேன்; சீக்கிரம் மல்லிகையை அனுப்பு.—ஐயோ! இதை விட வேறு வழி யில்லையா?

லீ. கண்ணே, நாம் இப்பொழுது யோசிப்பதற்குக் காலமில்லை; இதோ மல்லிகையை அனுப்பிவிட்டேன்; நான் கூறியது ஞாபகமிருக்கட்டும்.

[சுலோசனைக்கு ஒரு முத்தம் கொடுத்துப் போகிறாள்.]

சு. ஐயோ! என்னுடைய துர்ப்பாக்கியமே துர்ப்பாக்கியம்! நானொரு பாபமு மறியா திருக்கப் பிதா ஏன் இவ்வாறு என்மீது தவறான எண்ணங் கொண்டார்? ஆயினும் இதைப்பற்றி இப்பொழுது யோசித்து என்ன பிரயோஜனம்? என்னுடைய உயிரைத் தப்பித்துக்கொள்ளும் விதத்தைப் பார்க்கவேண்டும். ஐயோ! நான் இவ் வரண்மனையை விட்டுச் செல்லவேண்டுமோ? இதை விட்டுச் செல்வேனாயின் என் பிராணநாதரை நான் மறுபடியும் எப்படிக் காண்பது? அவரைக் காணவிட்டால் நான் எப்படி ஒரு தினமாவது உயிர் வாழ்வேன்? ஐயோ! அவரும் இங்கு வந்து என்னைத் தேடிக்காணேம் என்று வருந்துவாரே! எல்லா விஷயங்களையும் அவருடன் சொல்லிப் போகலா மென்றாலோ முன்பே வருகிறே னென்றவர் இன்னும் வரவில்லை! ஏதோ முக்கியமான வேலையா யிருக்கவேண்டும்; எப்படியும் நான் அரண்மனையை விட்

டுச் செல்லவேண்டி வந்ததை அவருக்குத் தெரிவிக்காமற் போகலாகாது. இதற்கென்ன செய்யலாம்? —ஆம், என் பிராணநாதருக்கு ஒரு நிருபமாவது எழுதுகிறேன்.—

[தானிருக்கும் அறையின் கதவைப் பூட்டி விட்டுவந்து ஓர் நிருப மெழுதுகிருள்.]

ஹா! பிராணநாதா! உம்மை விட்டுப் பிரிந்து நான் எப்படி உயிர் வாழ்ந்திருப்பது? ஐயோ! இந் நிருபத்தை எழுதவொட்டாமல் என் கண்ணீர் மறைக்கிறதே எல்லாவற்றிற்கும் சுவாமி யிருக்கிருர்—

[மல்லிகை பின்புறமாகக் கதவை தட்டி "அம்மா, அம்மா" என்று அழைக்கிருள்.]

மல்லிகா, சற்றுப் பொறு. இதோ வந்துவிட்டேன் [தனக்குள்] இதை அவருடைய அறையில் வைத்துவிட்டுச் செல்வேணுயின் என் பிராணநாதர் எப்படியும் பார்ப்பார்.—மல்லிகா, நீ கீழ்க் கோபுர வாயிலருகில் போயிரு, நா னங்கு வருகிறேன்.

[நிருபத்தைக் கையிற்கொண்டு கதவைத் திறந்து வெளியே போகிருள்.]

சிறிதுபொழுது கழித்து ஸ்ரீகந்தர் விரைவுடன் வருகிருர்.

ஸ்ரீ. சாவித்திரி, கண்ணே, சாவித்திரி! எங்கே என் கண்மணியைக் காணேம்? இங்குதானே இருப்பதாகக் கூறினுள்? ஒருவேளை சித்திரரேகா தேவியிடம் இருக்கிருளோ? —என்ன தவறு செய்தேன்! முன்பே வருவதாகக் கூறிவிட்டு இந் நேரம் பிரதாபசிலனுடன் பேசிக்கொண்டிருந்து விட்டேனே!—கண்ணே, சாவித்திரி!—எங்கே காணேம்? ஒரு வேளை என்னைத் தேடிக்கொண்டு என் அறைக்குச் சென்றனளோ? [விரைவுடன் போகிருர்.]

காட்சி முடிகிறது.



## இரண்டாவது காட்சி

இடம்—ஸ்ரீதத்தருடைய அறை.

லீலாவதி வருகிருள்.

லீ. அந்தமட்டும் மல்லிகையை நம்முடைய கைவசத்தில் வைத்திருக்கிறது மிகவும் நலமே! அவளுக்கு இப்பொழுது நான் கொடுத்த ஆயிரம் பொன் போதாது; அவள் செய்த வுதவிக்கு இன்னும் அதிகமாகவே கொடுக்கவேண்டும்.—எங்கே அந்த நிருபம்? சீக்கிரம் கண்டு பிடிக்கவேண்டும். இளவரசர் வந்துவிட்டா லென்ன செய்கிறது?—வந்தாலும் பெரிதல்ல; நிருபம் எங்கே? —ஆ! இதோ இருக்கிறது, படித்துப் பார்ப்போம்.

[படிக்கிருள்.]

"என தாருயிர்க் காதலரே"—சீ! கிழித்துப் போடவா இதை? அப்படியல்ல; நாம் அவசரப்பட்டு ஒன்றுஞ் செய்யலாகாது; முற்றிலும் படித்துப் பார்ப்போம்.— [படித்தபின்] ஆஹா! சுலோசனு! எங்கேயடி இதெல்லாம் கற்றுக்கொண்டாய்? என்ன எழுதுகிருள், என்ன எழுதுகிருள்! எத்தனை பிராணநாதா! எத்தனை காதலரே!

[படிக்கிருள்.]

—"இவ்விடத்தில் இரவு ஒன்பது நாழிகைக்கு என்னைத் தவருது காணவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்" ஆஹா!—சீச்சீ! சற்று முன்பாக இதைக் கிழித்துவிட வேண்டுமென்று நினைத்தோமே! அப்படி யல்ல, இந்த ஒன்பது நாழிகையை ஆறு நாழிகையாக மாற்றிவிடுவோம்—

[சுண்டு விரலின் நகத்தினுல் தன் கண்ணிலிட்டிருக்கும் மையை யெடுத்து அதைக் கொண்டு மாற்றிவிடுகிருள்.]

ஆஹா! இந்த மை ஆடவர்களுடைய கண்களை எத்தனை விதத்தில் மயக்குவதற்கு உபயோகப்படுகிறது!—இளவரசர் வந்துவிட்டாலும் வந்துவிடுவார். நாம் தாமதிக்க

லாகா தினி.

[நிருபத்தை முன்பிருந்த இடத்தில் வைத்து விடுகிறாள்.]

சுலோசனு! நாளைத்தினம் ஆறு நாழிகைக்கு உன்னுடைய காதலர் உன்னையன்றி வேறெந்த ஸ்திரீயையும் கண்ணெடுத்துப் பார்க்கிறதில்லையென்று உனக்குக் கூறிய மொழியின் உண்மையை நான் அறிகிறேன்!—அதோ வருகிறார் இளவரசர்!— [விரைவாகப் போகிறாள்.]

ஸ்ரீநத்தரும் கமலாகரரும் வருகிறார்கள்.

கம. ஐயனே, என் உமக்குப் பொறுமை யென்பதில்லை? சாவித்திரி உமக்குக் கூடிய சீக்கிரத்தில் எழுதாமற் போகமாட்டாள்; ஏன் அவசரப்படுகிறீர்? தாம் அவசரப்பட்டென்ன பயன்?

ஸ்ரீ. கமலாகரா! நான் படுந்துபரம் நீ சற்றும் அறிகிலை. என் காதலிக்கு ஏதாவது தீங்கு நேரிட்டிருக்கவேண்டும். இல்லாவிட்டால் எப்படியும் எனக்கு முன்பே எழுதியிருப்பாள். என்ன காரணம்பற்றி அவள் அரண்மனையை விட்டுச் சென்றாள்?— கமலாகரா! இதோ சாவித்திரியின் நிருபம்! சந்தேகமில்லை. என் கண்மணியின் கையெழுத்து எனக்குத் தெரியாதோ!

[நிருபத்தை விரைவுடன் படித்துப் பார்க்கிறார்.]

கம. இவ்வளவு நேரம் வீணுகத்தானே வருத்தப்பட்டீர்? நான் சொன்னதைக் கேட்டீரா?

ஸ்ரீ. கமலாகரா, இப்பொழு தெத்தனை நாழிகை இருக்கும்?

கம. இப்பொழுதுதான் சூரியன் அஸ்தமனமாயினன்; ஏன்? என்ன சமாசாரம்?

ஸ்ரீ. சாவித்திரி, ஆறு நாழிகைக்கு ஓரிடத்தில் தன்னை வந்து காணும்படி எழுதி யிருக்கிறாள். இப்பொழுதே நான் அங்கே போகிறேன்

கம. ஆனல் இப்பொழுது தான் இருக்குமிடத்தை எழுதி யிருக்கிருளோ ?

ஸ்ரீ. [கடிதத்தைப் பார்த்து] அதை எழுதவில்லை ; தான் இருக்குமிடத்தை ஓர் காரணம்பற்றி இன்னும் தான் வெளியிடக் கூடாதென்று எழுதி யிருக்கிருள். ஆறு நாழிகைக்கெல்லாம் நான் நம்முடைய பட்டணத்திற்குக் காத தூரத்திலிருக்கும் யுவராஜ நகரத்தில் ஆற்ருேரமா யுள்ள தென்னஞ்சோலையில் வந்து தன்னைக் காணும்படி எழுதி யிருக்கிருள்.

கம. ஆனல் சீக்கிரம் புறப்படும்.—ஐயனே ! மஹாராஜா வருகிருர் ; நிருபத்தை மறைத்துக்கொள்ளும் !

வாசவதத்தராஜனும், விக்கிரமவீரரும் வருகிருர்கள்.
ஸ்ரீதத்தர் தன் பிதாவுக்கு நமஸ்காரம் செய்கிருர்.

வா. ஸ்ரீதத்தா ! இந்த நமஸ்காரமெல்லாம் எனக்கு வேண்டாம். என் சொற்படி நடவாத பிள்ளை எனக்கு நமஸ்காரம் செய்தாலென்ன செய்யாமற்போனுலென்ன! அடே! உன்னைக் கடைசிமுறை கேட்கிறேன். லீலாவதியை மணம் புரிந்து என் சொற்படி நடக்கிருயா என்ன ?— மாட்டாயா ?— [ஸ்ரீதத்தர் தன் பிதாவின் காலைப் பற்றுகிருர்.] சீ ! நீ என் பிள்ளையல்ல, விடு என் காலை !

[காலை உதறிக்கொண்டு]

இன்னும் மூன்று தினங்களுக்குள்ளாக என்னுடைய ராஜ்யத்தைவிட்டுப் போகவேண்டும் நீ. அதற்கப்புறம் என் ராஜ்யத்தின் எல்லைக்குள் அகப்படுவாயாயின் உன்னைச் சிரச்சேதம் செய்து விடுவேன் ! வாசவதத்தனுடைய வார்த்தையைப் பார் !

[வாசவதத்தரும் விக்கிரமவீரரும் போகிருர்கள்.]

ஸ்ரீ. கமலாகரா, நான் விரும்பிய பொருளைப் பெறுவேனுயின் இவ் விராஜ்யம் எனக் கெவ்வளவு !

கம. இதென்ன சங்கடம்! ஐயனே,—

ஸ்ரீ. கமலாகரா, நேரமாய்விட்டது, இப்பொழுது உன்னுடன் பேசக் காலமில்லை. நாளைத்தினம் காலையில் வந்து என்னைக் காண். [விரைவுடன் போகிறார்.]

கம. சீ! எல்லாம் கெடும்போலிருக்கிறதே! இனி நான் சும்மா இருக்கலாகாது. மஹாராஜாவிடம் போய் அவருடைய கோபத்தைத் தணிக்க முயலவேண்டும்; என்ன ஆச்சரியமா யிருக்கிறது! மஹாராஜா ஒருகாலும் இப்படித் தானாகக் கட்டளையிட மாட்டார்; யாரோ அவரைத் தூண்டிவிட் டிருக்கவேண்டும். [போகிறார்.]

காட்சி முடிகிறது.

---

## மூன்றாவது காட்சி

இடம்—யுவராஜ நகரத்தில் ஆற்றோரத்திலுள்ள
ஓர் தென்னஞ்சோலை. காலம்—இரவு.

லீலாவதி உலாவிக்கொண் டிருக்கிறாள்.

லீ. இவ் வழகிய தென்னஞ் சோலையில் நிலவு காய்வது எவ்வளவு ரமணீயமா யிருக்கிறது! ஆற்றில் படிந்து வரும் குளிர்ந்த காற்று இங்கு வீச, இம் மரக் கிளைகள் மெல்ல அசைந் தாடுவது மிகவும் அழகா யிருக்கிறது; ஆற்றில் பருக்கைக் கற்களில் ஜலம் ஓடுவதினாலுண்டாம் ஒலி காதிற்கு ஓர் இனிப்பைக் கொடுக்கிறது. காதலர்கள் சந்திப்பதற்கு இதுவே தக்க இடம்! அப்மட்டும் சுலோசனை புத்திசாலிதான். இவளுக்கு இவ்வளவு புத்தியும் யுக்தியும் எங்கிருந்து வந்தன? மூடர்களும் காதலென்னும் வலையிற் சிக்குவாராயின் அவர்களுக்கு யுக்தி அதிகரிக்குமென்பது உண்மைதான் போலும்!—நல்லது, ஆறு நாழிகையா யிருக்கும், இளவரசர் எப்படியும் இப்பொழுது இங்கு தன்னைச் சுலோசனை எதிர்பார்த்துக்கொண் டிருப்

பாள் என்றெண்ணி வருவார். ஒருவேளை நான் நாழிகையை மாற்றிய சூதைக் கண்டறிந்தால்!— அது அசாத்தியம்! நான் மாற்றியதை இப்பொழுது சுலோசனைக்குக் காட்டினாலும் அவளும் தெரிந்துக் கொள்ளமாட்டாள். ஐயோ! சுலோசனா, உன் காதலர் என் வலையில் இப்பொழுது சிக்கப்போகிறார்!—நீ என்ன செய்வாய்! பாவம்!—ஒஹோ! அதோ தூரத்தில் வருகிறார்; சந்திரிகை வீசாத இவ் விருண்ட இடத்தில் நான் உட்கார்ந்து கொள்கிறேன். நானே சாவித்திரி சாதாரணமாக அணியும் ஆடையை அணிந்திருக்கிறேன். இவ்விருட்டில் இளவரசர் எப்படியும் என்னைச் சாவித்திரி என்றே எண்ணி வந்தவுடன் ஆவலுடன் கட்டியணைத்து முத்த மிடுவார். பிறகு நாம் செய்யவேண்டியதைப் பார்த்துக்கொள்ளுவோம், இப்பொழுது நாம் வாயைத் திறக்கலாகாது.

[உட்கார்ந்துகொள்ளுகிறாள்.]

ஓர் புறமாக **ஸ்ரீதத்தர்** வருகிறார்.

ஸ்ரீ. சாவித்திரி, சாவித்திரி,—ஆ! கண்ணே! உன்னை நான் எங்கெங்கே தேடுவது?

[லீலாவதியைக் கண்டு அவள்தான் சாவித்திரி யென்றெண்ணி, அவ ளருகில் விரைந்தோடிப் பக்கத்தில் உட்கார்ந்து கொள்ளுகிறார்.]

கண்மணி, ஏன் அரண்மனையைவிட்டு இங்கு வந்தாய்? என்ன ஒருவாறாயிருக்கிறாய்? கண்ணே, என்மீது என்ன கோபம்? நான் என்ன அபராதம் செய்தேன்?

[லீலாவதிக்கு முத்தமிடப் போகும்பொழுது லீலாவதி திரும்பி ஸ்ரீதத்தருக்கு முத்தம் கொடுக்கிறாள்; லீலாவதியின் முகத்தைப் பார்த்தவுடன் ஸ்ரீதத்தர் திடுக்கிட்டெழுந்திருக்கிறார்.]

ஆ! பெண்ணே! நீ யார்?

லீ. பிராணநாதா,—நான் லீலாவதி,—உமக்குத்தெரியவிதோ?

ஸ்ரீ. பிராணநாதா !—நீ இங் கெப்படி வந்தாய் ? உண்மை யைக் கூறுகிருயா என்ன ?

லீ. பிராணநாதா, அவசரப்பட வேண்டாம், நிற்கிறீரே, சற்று இப்படி உட்காரும், சொல்லுகிறேன்.

ஸ்ரீ. [கோபங்கொண்டு] இன்னொரு முறை என்னைப் பிராண நாதாவென்று அழையாதே! இங் கெப்படி வந்தாய் நீ ? நான் இங்கு வருவேனென்று உனக்குத் தெரியுமோ ?

லீ. தெரியாது.

ஸ்ரீ. தெரியாது !—ஆ ! நான் என்ன தவறு செய்தேன் !— லீலாவதி, நீயேன் இங்கு வந்திருக்கிருய் ?

லீ. இளவரசே, உம்மை நேரில் அன்று கண்டதுமுதல்—உம் மீது அடங்காக் காதல் கொண்டேன் ; அதுமுதல் உம் மீதுகொண்ட விரகதாபத்தால் நான் வருந்தியது கொஞ் சமன்று. அரண்மனையில் இருக்கச் சகியாமல் இவ்வாற் ருேரமாகவந்து சற்று உட்கார்ந்திருந்தால் இக் குளிர்ந்த காற்றிலைவது அந்தத் தாபம் சற்றுத் தணியுமென்று கருதி இங்கு வந்தேன் ; தெய்வ கடாக்ஷத்தால் உம்மை யே நான் இங்கு காணப்பெற்றேன் ; கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தது. பிராணநாதா, உம்மீது நான் காதல் கொண்டிருக்கிறேன்—என்னுடைய மனோ ரதத்தைத் தாம் இன்று பூர்த்தி செய்யவேண்டும்.

ஸ்ரீ. பெண்ணே ! என்ன சொன்னுய் ? உனக்கு நாணமென் பது சற்றேனு மில்லையோ ? அன்று அரச சபையில் உன்னை நான் ஒருகாலும் மணம் புரியேனென்று சபதம் செய்ததை மறந்துவிட்டாயா என்ன ? நான் சொல்வதைக் கேள். நான் உன்னை ஒருகாலும் மணம் புரியேன். நீ என்மீது வீணுகக் காதல் கொள்வதிற் பயனில்லை, என் மீது கொண்ட காதலை விட்டுவிடு. உனக்குத் தக்க புரு ஷனை நீ மணந்து சுகமாய் வாழ்ந்திரு.—பெண்ணே, நீ என்னை இங்கே கண்டதாக ஒருவரிடமும் கூறுதே, போ.

லீ. உமது கட்டளைப்படி ; நான் ஒருவரிடமும் கூறவில்லை;— அதிருக்கட்டும். அரசே, நானோ உம்மீது காதல் கொண்டுவிட்டேன் ; அதனை விட்டுவிட என்னால் முடியவில்லை. நான் எப்பொழுது உம்மீது காதல் கொண்டேனோ அப்பொழுதே நான் உமக்கு மனையாளாய்விட்டேன். அப்படி யிருக்க நீர் இப்பொழுது என்னை வெறுப்பது முறையோ? அரசே, எப்படியாவது நீர் என்மீது கருணை புரிந்து என் மனோரதத்தை நிறைவேற்றிச் செல்லவேண்டும் இன்று.

ஸ்ரீ. சீ ! நீ பெண்ணல்ல ! [கோபத்துடன் போகிறார்.]

லீ. [ஸ்ரீதத்தரை வழி மறித்து] ராஜகுமாரா, அது போனால் போகட்டும் ; நான் உம்மைச் சில நியாயங்கள் கேட்க வேண்டும் ; அவற்றிற்கு விடை யளித்துவிட்டுப் பிறகு செல்லும். நியாய மறிந்திருந்தும் அதனைக் கேட்பவர்க்குக் கூறுமற் செல்பவர் கொடு நரகில் வீழ்வார்களென்று தர்ம சாஸ்திரங்கள் கூறுவதை மறக்க வேண்டாம், மறக்கவேண்டாம் !

ஸ்ரீ. ஐயோ ! இதென்ன தர்ம சங்கடமாயிருக்கிறது ! என்ன வேண்டும் ? கேள் சீக்கிரம்.

லீ. தயை செய்து இப்படி உட்காரும்.

[ஸ்ரீதத்தர் உட்காருகிறார்.]

ஸ்ரீ. அப்பா ! உன்னைப் பார்த்தலும் தவறு !

[தலையைத் திருப்பிக் கொள்ளுகிறார்.]

லீ. ராஜகுமாரா, ஒருவருடைய குற்றத்திற்காக மற்றொருவரைத் தண்டிப்பது நியாயமோ ? அவரவர்கள் செய்த குற்றத்திற்கன்றோ அவரவர்கள் சிக்ஷிக்கப்பட வேண்டும். உம்முடைய பிதா உமக்கு என்னை மணம் பேசும்படியாக ராயபாரியை என் பிதாவிடம் அனுப்பினார்; அதற்கென் பிதா இசைந்தார். எப்பொழுது என்பிதா என்னை உமக்குக்கொடுக்க இசைந்தாரோ, அப்பொழுதே நான் உமக்கு மனைவியாய்விட்டேன். மஹா பாரதத்தில் காந்தாரி

தேவி, தன் பிதா தன்னைத் திருதராஷ்டிரனுக்குக் கொடுக்க எப்பொழுது இசைந்தாரோ அப்பொழுதே தான் அவருக்குப் பத்னியாய்விட்டதாகக் கூறி, திருதராஷ்டிரன் நேத்திர மில்லாதவனென்று பிறகு கண்டறிந்த அவள் பிதா மறுத்தும், தன் கற்பிற்கு அழிவு வராவண்ணம அத் திருதராஷ்டிரனையே மணந்தனள். அப்படியிருக்க, இப்பொழுது நீர் என்னை வெறுத்தீராயின் என்கதி என்னவாவது ? ஆனால், உம்முடைய பிதா உம்மைக் கேட்காது செய்தது தவறென்று கூறுவீர்; அப்படியே யிருக்கட்டும். உம்முடைய பிதா செய்த தப்பிதத்திற்காக நான் ஏன் துயர மனுபவிக்க வேண்டும் ? ஐயனே ! இது நியாயமோ ? இது போனாற் போகட்டும். ஓர் கன்னிகையின் கரத்தை ஓர் ஆடவன் அகஸ்மாத்தாய்ப் பற்றினும் அந்த க்ஷணமே அக் கன்னிகை அப் புருஷனுக்கு மனைவியாகிறு ளென்றும், அக் கன்னிகை அப் புருஷனையன்றி வேறொரு புருஷனை மணந்தால் அவளுடைய கற்பிற்கு அழிவு வருமென்றும் தர்ம சாஸ்திரங்கள் கூறுகின்றன. இதுபற்றியன்றோ தெய்வயானை பிராமணப் பெண்ணா யிருந்தும் அகஸ்மாத்தாய்த் தன் கரத்தைப் பற்றிய யயாதியை மணஞ் செய்து கொள்ளும்படி நேரிட்டது. அப்படியிருக்க, நீரோ எனது கரத்தைப்பற்றி என்னைச் சற்று முன்பாகக் கட்டி யணைத்தீர். எப்பொழுது எனது கரத்தைப் பற்றினீரோ அப்பொழுதே நான் உமக்குப் பத்னி யாய்விட்டேன். உம்முடைய பத்னியை நீர் இப்பொழுது வெறுப்பது நியாயமோ ? இது யார் செய்த தவறு ? நானாக வலிய வந்து உம்மைத் தீண்டவில்லை, நீர்தானே என்னைத் தீண்டினீர் ?—பிராணநாதா, நான் இப்பொழுது உம்மை யன்றி வேறொரு புருஷனைக் கனவில் நினைப்பினும் என் கற்பிற்கு அழிவு வருமன்றோ ? ஐயனே, நீர் இப்பொழுது என்னை வெறுப்பீராயின் என் கதி என்னவாகுமென்று நீரே யோசித்துப் பாரும். ஸ்திரீகளுக்கு முக்கியமாக வேண்டியது புருஷ

பாக்கியமே; நீர் என்னை விவாகஞ் செய்து கொள்ளா விட்டால், கற்பை முதன்மையாகக் கருதும் நான் வேறெப் புருஷனையும் விவாகஞ் செய்துகொள்ள முடியாது. பிறகு புருஷ பாக்கிய மில்லாத நான் இப் புவியில் இருந்தென்ன பயன்? இறக்கவேண்டியதுதான்; அரசே, நான் இறப்பேனாகில் அப் பழி யாரைச் சேரும்? உம்மையன்றோ சேரும்? அரசே, ஸ்திரீ ஹத்தி மிகவும் கொடியது, அதிலும் நான் கன்னிகை—

ஸ்ரீ. [பெருமூச் செறிந்து] அப்பா! பேய்களும் தர்ம சாஸ்திரங்களைப் படித்திருக்கின்றனவே!

லீ. அரசே, பேதை என் மனத்தை இவ்வாறு வருத்துவது உமக்கு நியாயமோ? ஐயனே, நீர் என்னை வெறுத்த போதிலும் நான் உம்மையன்றி வேறொரு புருஷனை ஒருகாலும் மணம் புரியேன்; இது சத்தியம். அரசே, தானாக வந்தால் தாயா யிருந்தாலும் தழுவும்படித் தர்ம சாஸ்திரங்கள் கூறுகின்றனவே, காதற்கரசே,—

[ஸ்ரீதத்தர் அருகிற் செல்கிறாள்.]

ஸ்ரீ. சீ! துராத்மா, தூரநில்!

லீ. அரசே, அப்படியே. உமது உத்தரவின்படி.— ராஜகுமாரா, மற்ற நியாயங்க ளெல்லாமிருக்கட்டும்; நீரோ க்ஷத்ரிய குலத்திற் பிறந்த சுத்தவீரர். உம்மைத் தஞ்சமென்று வந்தடைந்தவர்களுடைய பகைவரைத் தொலைத்து அவர்களுடைய துயரைக் களைவது உம்முடைய கடமை யன்றோ? பிராணநாதா, நான் பெண் பேதையென்றுமெண்ணாமல் சித்தஜன் என்னைப் பகைத்து, இப் பாவி சந்திரனையும் தென்றலையும் தனக்குத் துணையாகக் கொண்டு, கடல் முரச மார்ப்ப என் னருகில் வந்து, தன் கருப்புச் சிலையை வளைத்து, புஷ்ப பாணங்களால் என் ஆகத்தை யெல்லாம் சல்லடைக் கண்களாகத் துளைக்கிறான். பிராணநாதா, பகைவன் இப்படி என்னை வருத்தும்பொழுது தாம் சும்மா விருப்பது நியாயமோ?

இன்னும் சற்று நேரம் சும்மா இருப்பீராயின் மதன் என்னுவியைக் கொண்டு போவான்! காதற்கரசே, இனித் தாமதிக்கலாகாது, ஆகாது! பிராணநாதா, இந்த மன் மதனுடைய கர்வத்தை யடக்கி என்னை ரக்ஷித்தருளும்! இனி என்னால் சகிக்க முடியாது! பிராணநாதா, அபயம்! அபயம்! [ஸ்ரீதத்தர் அருகிற் செல்கிறாள்.]

ஸ்ரீ. [தன் உடைவாளை வீசி மிகுந்த கோபத்துடன் தடுத்து] சீ! துராத்மா, என்னருகில் வாராதே! நீ பெண்ணாயிராவிட்டால் இந்நேரம் உன்னை ஒரே வெட்டாய் வெட்டிவிட்டிருப்பேன்! தப்பிப் பிழைத்துப் போ!—இப் பேயை நாம் பார்த்தலுந் தவறு!—சீ! என்ன தப்பிதஞ் செய்தேன் நான்! [முகத்தைத் திருப்பிக் கொள்கிறார்.]

லீ. [ஸ்ரீதத்தர் பின்புறமாகச் சென்று] பிராணநாதா, நீர் என்னை விவாகஞ் செய்து கொள்ளாமற்போனால் போகிறது, நானே சீக்கிரம் இறக்கப் போகிறேன். நான் இறப்பதன்முன் ஒரு முறை என்னைக் கட்டி யணைத்து ஒரு முத்த மிடுமே! பிராணநாதா! பிராணநாதா!—

ஸ்ரீ. [அடங்காக் கோபத்துடன் லீலாவதி கரத்தினின்றும் திமிறிக் கொண்டு] நீ பெண்ணல்ல, பேயே!

[விரைவுடன் போகிறார்.]

லீ. [தனி மொழி] ஆ! இதுவோ என்னுடைய விதி!—ஆஹா! இந்த ராஜ குமாரனுடைய மன உறுதியே உறுதி! என்னாலான மட்டும் முயன்றும் இவ் விராஜ குமாரனுடைய மனத்தைத் திருப்ப முடியாமற் போயிற் றல்லவா! சிறிதாயினும் இப் பாவியின் மனம் இளகியதா? பாவி என்னுயிர்க்கு எமனாக எங்கென்று பிறந்தாயோ? பெண்ணென்றும் பாராமல் என்னை உதைத்துச் சென்றையே! என் வயிறு எரிகிறதே! இது உன்னை விடுமோ? என் வயிறு எரிகிறதுபோல் நீயும் எரிந்து போகமாட்டாயா! சண்டாளப் பாவி! நான் என்ன வேண்டியும் ஒரு முத்தமாவது கொடுத்தாளு என் ஆசைதீர! அப் பாதகி சுலோ

சனையுடன் அன்று பேசியபொழுது ஒரு வார்த்தைக்கு ஒரு முத்த மிட்டானே! என் வயிறு எரியும்பொழுது நீங்க ளிருவரும் சுகமாய் வாழப்போகிறீர்களா? ஈசனே! ஈசனே! இதுவோ என்னுடைய விதி!—சீ! இதென்ன நான் இப்படி இருக்கிறேன்? என் ஊக்கம் எங்கே போயிற்று? லீலாவதி! எல்லோரும் உனது வலைக்குள் சிக்கும்படி செய்யும் நீயோ ஒரு அற்ப ராஜகுமாரனுடைய வலையி லகப்படுவது? சீ! என்னை நான் மறந்திருந்தேன் இதுவரையில்!— ஆஹா! ஸ்ரீதத்தராஜனே! நானாக வலிய வந்தும் என்னை வெறுத்தா யல்லவா? உன் உயிருக்கு நான் இனி யமனாகாவிட்டால் நான் லீலாவதி யல்ல! எந்தச் சுலோசனையின்மீது கொண்ட காதலினால் என்னை வெறுத்தாயோ அந்த சுலோசனையைக்கொண்டே உன் உயிருக்கு வழி தேடாவிட்டால் நான் என் பிதாவின் மகளன்று! அக் காதலை யெல்லாம் அரை க்ஷணத்தில் வெறுப்பாக்குகிறேன் பார்! ஆஹா! லீலாவதியின் மகிமை உனக்குத் தெரியாது, காட்டுகிறேன் பார்!— இதோ சுலோசனைக்கு நீ கொடுத்த மோதிரம்! இப்பொழுது யார் கையி லிருக்கிறது இது?—நாம் ஆத்திரப்பட லாகாது. இப்பொழுது என்ன செய்யவேண்டுமென்று யோசிப்போம். பிரதாபசீலரைக் கொண்டே நம்முடைய காரியத்தை நிறைவேற்றவேண்டும். அவர் எப்படியும் நாம் சொல்லுகிறபடி நடப்பார். இம் மோதிரத்தை அவரிடம் கொடுத்து ஸ்ரீதத்தனுடைய மனத்தைக் கலங்கச் செய்யவேண்டும். பிறகு நாம் செய்யு வேண்டிய வேலையைப் பார்த்துக் கொள்ளுவோம்.—என்னை வெறுத்த ராஜகுமாரா? லீலாவதியின் சக்தியைச் சீக்கிரம் காண்பாய்! [போகிறாள்.]

சிறிதுபொழுது கழித்து ஓர் நிருபத்துடன் ஸ்ரீதத்தர் மற்றொரு புறமாக வருகிறார்.

ஸ்ரீ. சனி ஒழிந்தது!—என்ன ஆச்சரியம்! இது சாவித்திரியின் கையெழுத்து என்பதகுச் சந்தேகமே யில்லை. ஆறு

நாழிகைக்கு இங்கு வந்திருப்பதாக எழுதியவள் ஏன் இன்னும் வரவில்லை? இங்குச் சற்று நேரம் உட்கார்ந்து பார்ப்போம். ஐயோ! நான் என்ன தப்பிதஞ் செய்தேன்! என் காதலிக்கு நான் செய்த பிரமாணத்தினின்றும் தவறினேனே!—கண்ணே! சாவித்திரி! சாவித்திரி!
[மூர்ச்சையாகிறார்.]

சுலோசனை வருகிறாள்.

சு. இன்னும் ஒன்பது நாழிகை யாகாவிட்டாலும் எனக்கு வீட்டிலிருப்பதென்றால் மனம் பொறுக்க வில்லை.—அது யார் அங்கு படுத்திருப்பது? என்னுடைய பிராணநாதர் போ லிருக்கிறதே; ஆம்! ஆம்! அவர்தான்.
[அருகிற் செல்கிறாள்.]
உறங்குகிறார் எனக்கு முன்பாகவே இவர் இங்கு வந்திருக்கிறார் போலும்; நான் எழுதிய நிருபத்தைக் கையில் வைத்துக்கொண் டிருக்கிறார்; எழுப்புவோம்.
[எழுப்புகிறாள். ஸ்ரீதத்தர் எழுந்திருந்து சற் றொதுங்கி நிற்கிறார்.]
பிராணநாதா, என்ன ஒருவாறாய்த் தூர நிற்கிறீர்? இன்னும் தூக்க மயக்கந் தெளியவில்லையோ?

ஸ்ரீ. சாவித்திரி, இனி உன் கரத்தால் நீ தீண்டுவதற்கும் நான் பாத்திரமானவ னல்லன்!

சு. பிராணநாதா, என்ன சமாசாரம்? விளையாடுகிறீரா என்ன?

ஸ்ரீ. ஐயோ! கண்ணே! என்னைத் தீண்டாதே! நான் சொல்வதைக் கேள்; பிறகு என்னைத் தீண்டத் தகும் என்று உனக்குத் தோன்றுமாயின் அப்படியே செய்.

சு. அப்படியா சமாசாரம்? உட்காரு மிப்படி.
[பலவந்தமாய் ஸ்ரீதத்தரைத் தன் அருகில் உட்காரும்படி செய்கிறாள்.]
உம்மை நான் தொடவில்லை! என்ன சங்கதி சொல்லும். ஏன் முகம் ஒருவாறா யிருக்கிறீர், பிராணநாதா?

ஸ்ரீ. கண்ணே, சாவித்திரி, நான் உனக்குக் கூறிய பிரமாணத்தினின்றும் தவறினேன்!

சு. தவறுவதாவது?—

ஸ்ரீ. கண்ணே, நான் சொல்வதைக் கேள், நான் உன்னையன்றி வேறொரு ஸ்திரீயையும் கண்ணெடுத்தும் பார்க்கிறதில்லையென்று கூறினேனல்லவா; அதினின்றும் தவறினேனின்று!

சு. எப்படி? எப்படி, பிராணநாதா?

ஸ்ரீ. நீ இந் நிருபத்தில் எழுதியபடி ஆறு நாழிகைக்கு இங்கு வந்தேன். இங்கு விருக்ஷங்களின் மறைவில் ஓர் பெண் உட்கார்ந்திருக்கக் கண்டு, நீதானென்று நினைத்து, வந்த அவசரத்தில் உற்றுப் பாராது அவளை என் கரத்தால் தழுவினேன். உடனே நான் செய்த தப்பிதத்தையறிந்து நான் வருத்தப்பட்டது ஈசனுக்கே தெரியும்!

சு. அது யார் அந்தப் பெண்? இங்கெப்படி வந்தாள்?

ஸ்ரீ. அவளை உனக்குத் தெரியாது. அகஸ்மாத்தாய் இங்கு வந்து உட்கார்ந்திருந்தனளாம்; அவள் பராக்கிரமகேதுவின் மூத்த பெண் லீலாவதி—

சு. என்ன! லீலாவதியா?

ஸ்ரீ. ஆம், லிலாவதியை உனக்குத் தெரியுமோ?

சு. தெரியும் பிராணநாதா—ஆயினும் எனக்குச் சந்தேகமாக இருக்கிறது—அவள் லீலாவதிதான் என்று உமக்கு உறுதியாகத் தெரியுமா?

ஸ்ரீ. அதற்குச் சந்தேகமேயில்லை; அவளே எனக்குக் கூறினாள்.

சு. எங்கே லீலாவதி?

ஸ்ரீ. போய்விட்டிருப்பாள். நீயல்லவென்று கண்டவுடன் மிகவும் கோபமூண்டு நான் அவளை வைது முடிவில் பெண்ணென்றும் பாராமல்—உதைத்துச் சென்றேன்.

சு. பிராணநாதா! ஐயோ! பாவம்! ஏன் உதைத்தீர்?

ஸ்ரீ. அவள் நாணத்தை யெல்லாம் விட்டுத் தன்னை மணம் புரியும்படி என்னைக் கேட்டாள்.

சு. லீலாவதியா?

ஸ்ரீ. ஆம்; அவள் பெண்ணல்ல, ஓர் பேயென்றே எண்ணு கிறேன்!

சு. பிராணநாதா, அவள் லீலாவதி யல்ல; எனக்கு லீலாவதி யைத் தெரியுமே; அவ்வளவு அற்பமாக அவள் ஒரு காலும் நடக்கமாட்டாள். வேறு யாரையோ லீலாவதி யென்று எண்ணி யிருக்கிறீர் நீர்.

ஸ்ரீ. அவள் லீலாவதியென்று தானே கூறினளே; ஆயினும் எனக்கு நன்றாய்த் தெரியாது. ஒருவேளை நான் தவ றாக எண்ணினும் எண்ணி யிருக்கலாம்.

சு. அதற்குச் சந்தேக மில்லை; லீலாவதி ஒருகாலு மப்படிச் செய்திருக்கமாட்டாள்.

ஸ்ரீ. அதெப்படி யாயினு மிருக்கட்டும்; யாரா யிருந்தாலு மென்ன? நான் வேறொரு ஸ்திரீயின் கரத்தைத் தீண்டிய துண்மையே; பிறகு நான் செய்த குற்றத்தை அறிந்து அதற்காக வியசனப் பட்டபோதிலும் செய்த குற்றங் குற்றமே! கண்ணே, இந்த அபராதத்திற்கு நான் பிரா யச்சித்தமாக என்ன செய்வது—சீ! இக்கர மல்லவா தப்பிதஞ் செய்தது? இது இனி யிருக்க லாகாது.

[உடைவாளை ஓங்கித் தன் இடது கரத்தைச் சேதிக்க முயலுகிறார். உடனே சுலோ சனை அதைத் தடுக்கிறாள்.]

சு. பிராணநாதா! என்ன காரியஞ் செய்யத் துணிந்தீர்? விடும் வாளை! [வாளை வாங்கிக் கீழே எறிந்து விடுகிறாள்.] பிராணநாதா, நீர் செய்த தப்பிதத்திற்கு நீரே தண்டனை விதித்துக்கொள்வதோ? நா னல்லவோ விதிக்கவேண் டும்?

ஸ்ரீ. ஆம், கண்மணி, நீ என்ன தண்டனை விதித்தபோதிலும் ஏற்கச் சித்தமா யிருக்கிறேன்.

சு. பிராணநாதா, நான் சொல்வதைக் கேளும். முதலில் நீர் குற்றமே செய்யவில்லையே! வேறொரு ஸ்திரீயென்று உமக்குத் தெரிந்திருந்து நீர் அவளைத் தீண்டி யிருப்பீரா யின் அது தவறாகும்; நானென்று நினைத்து அறியாமல் அவளது கரத்தைப் பற்றியது என்னுடைய கரத்தைப் பற்றியதே யாகும். அதுவுமன்றி, நீர் உண்மையை அறிந்தவுடன் அவளை வெறுத்ததுமன்றி, பாவம் உதைத் தும் துரத்தினீர்! இதிலென்ன தவறிருக்கிறது? ஆயி னும் நீர் என்னுடைய கரத்தைப் பற்றினால் எவ்வளவு தவறாமோ அவ்வளவு தவறு செய்திருக்கிறீர்! இதற்கு நான் தக்க தண்டனை விதிக்கவேண்டும்!

[ஸ்ரீதத்தரை முத்தமிட்டு]

சரிதானா இப்பொழுது?

ஸ்ரீ. என் காதற்கிளியே இம் மாதிரியான தண்டனை எனக் குத் தினம் நீ விதிப்பாயாக! என் கண்ணின் கருமணி யே, உனது நற்குணத்தை நான் என்னவென்று புகழ் வது! [அவசரத்துடன் எழுந்திருந்து]

ஓஹோ! கண்ணே, மழை நீர் துளிக்க ஆரம்பித்துவிட் டது. பெரும் மழை வரும்போ லிருக்கிறது. நாம் இனி இங் கிருக்கலாகாது. இங் கருகாமையிலுள்ள வீட் டிற்கு போவோம் வா, உனக்கெல்லாம் அப்புறம் விளங் கச் சொல்லுகிறேன்.

[சுலோசனையை யழைத்துக்கொண்டு விரை ந்து போகிறார்.]

காட்சி முடிகிறது.



# ஐந்தாவது அங்கம்

---

## முதற் காட்சி

இடம்—அரண்மனையில் இளவரசர் விடுதி. காலம்—மாலை.

பத்மாக்ஷி வருகிறாள்.

பத். எங்கே ஸ்ரீதத்தர்?—சீ! இங்கும் காணோம்; இவரைப் பார்ப்பதே கடினமா யிருக்கிறது. இங் கெப்படியும் வருவார்; சற்று உட்கார்ந்து பார்ப்போம்.—ஒரு வேளை இந்த சாவித்திரி என்பவள்தான் சுலோசனையா யிருக்கக் கூடுமா? சுலோசனை காணாமற்போன காலத்திற்கும் இங்கு சாவித்திரி வந்ததாக இவர்கள் கூறும் காலத்திற் கும் சற்றேறக்குறைய ஒத்தே யிருக்கிறது. அப்படி யிருக்குமாயின் சுலோசனை தன்னுடைய உண்மையான பெயரை வெளியிடாது ஏன் வேறு பெயர் பூண்டு ஓர் பாங்கியாய் இங்கிருக்க வேண்டும்? ஏன் அவள் திடீ ரென்று இந்த அரண்மனையை இப்பொழுது விட்டுப் போயிருக்க வேண்டும்? ஒருவேளை தந்தவக்கிரன் கூறி யது உண்மையோ என்னவோ?—சீச்சீ! அப்படி ஒரு காலு மிராது. இந்தச் சாவித்திரி சுலோசனையாக விருக் கமாட்டாள்.— ஆயினும் எனக்கு சந்தேகமாகவே யிருக்கிறது;— சாவித்திரியின் ரூபம் முதலியவற்றைப் பற்றி நான் கேள்விப்பட்ட,தெல்லாம் சுலோசனையின் ஜாடையா யிருக்கிறது, ஓ! இளவரசர்தான் சாவித்திரி யை அழைத்து வந்து, சித்திரரேகா தேவியிடம் பணி செய்ய விட்டனரென்று கூறினார்க ளல்லவா? அவரைக் கேட்டால் எல்லாம் வெளியாகும். எங்கே இன்னும் இளவரசரைக் காணோம்?—

விசித்திரசர்மன் வருகிறான்.

விதூஷகரே, இளவரச ரெங்கே தெரியுமா உமக்கு?

விசி. தெரியாது.

பத். ஐயா, நான் அவரைச் சீக்கிரம் பார்க்கவேண்டும். எங்கும் தேடுகிறேன் ; காணேம் ; வேறு யாருக்காவது தெரியுமா அவர் இப்பொழு திருக்கு மிடம் ?

விசி. எனது மைத்துனனுடைய அண்ணன் பாட்டனுரின் மூத்த குமாரனுக்கு மாமனருடைய தகப்பனுக்குத் தம்பியின் பேரப் பிள்ளையினுடைய பெண்சாதியின் தாயாருடைய மாமியாருக்குத் தங்கையின் நாத்திக்கு அக்காள் பாட்டியின் பந்துக்களுக்கு, ஒருவேளை, யாருக்காவது தெரிந்திருந்தாலு மிருக்கும்.

பத். ஐயா ! எப்பொழுதுதான் இந்த விளையாட்டை விடுவீர் ? எதற்கும் கால மில்லையா ?—உண்மையில் இளவரசர் இப்பொழுது எங் கிருக்கிருர் என்று உமக்குத் தெரியாதா ?

விசி. என்ன அம்மா இப்படிக் கேட்கிறீர்களே ? அரிச்சந்திரன் வாயில் ஒரு பொய் வருமா ?

[பத்மாக்ஷி கோபத்துடன் போகிருள்.]

என் வாயில் ஒரு மெய் வருமா ! அம்மட்டும் இதுவரையில் இளவரசர் கட்டளையின்படி அவர் இருக்குமிடத்தை ஒருவரிடமுங் கூருது தப்பித்துக் கொண்டேனே ! —அடடா ! இவ ரெங்கு வந்தார் ?

மிக்க விரைவுடன் விக்கிரமவீரர் வருகிருர்.

விக். ஐயா ! இளவரச ரெங்கே ? இளவரச ரெங்கே ?

விசி. ஏது மிக்க அவசரமா யிருக்கிறதுபோ லிருக்கிறது.

விக். ஆமாம், ஆமாம் ! சீக்கிரம் சொல்லும், மஹாராஜா அனுப்பி யிருக்கிருர் என்னை, எங்கே அவர் ?

விசி. ஐயா, விக்கிரமவீரரே, தாங்கள் ஆத்திசூடி படித்திருக்கிறீரா ?

விக். அதெல்லாம் என்னத்திற் கையா ? இளவரசர் எங்கே, சீக்கிரம் சொல்லும், எனக்கு அவசரமா யிருக்கிறது.

விசி. எனக்கு அவசரமா யில்லை இப்படி யெல்லாம் கேட்டால் நான் சொல்லமாட்டேன்.

விக். கோபித்துக் கொள்ளவேண்டாம் ஐயா, உமக்குத் தெரியுமா சொல்லும்.

விசி. இப்படி உட்காருஞ் சொல்லுகிறேன். பயப்படவேண்டாமையா, முன்போல எங்கே பூமிதேவியின்மீது உட்காரவேண்டி வருகிறதோ என்று பயப்படுகிறீரோ? இல்லை, உட்காரும்.

விக். இதோ உட்கார்ந்தேன். சீக்கிரம் சொல்லும்,

விசி. ஆத்திசூடி படித்திருக்கிறீரா நீர்?

விக். படித்திருக்கிறேன்.

விசி. அதில் "அறஞ்செய விரும்பு" என்பதற்குப் பிறகு "அவசரப்படேல்" என்றிருக்கிறதே தெரியுமா அது?

விக். இப்பொழுது விளையாடுவதற்கா உட்காரச் சொன்னீர் என்னை?

விசி. அதைப் படித்திருந்தால் இப்படிச் செய்யமாட்டீர். 'அவசரப்படேல்'—உட்காரும், என்ன சமாசாரம்?

விக். என்ன ஐயா இது? மஹாராஜா இளவரசரை எப்படியாவது கூடிய சீக்கிரத்தில் கண்டு, தான் அவருடன் பேச வருவதாகக் கூறி, உடனே தன்னிடம் வந்து அவரிருக்கு மிடத்தைத் தெரிவிக்கவேண்டுமென்று கட்டளையிட்டார் எனக்கு, இப்பொழுதாவது சீக்கிரம் சொல்லுமையா. இளவரசர் எங்கிருக்கிறார் தெரியுமா உமக்கு?

விசி. ஐயோ, முன்பே சொல்லி யிருக்கலாகாதா? எழுந்திரும் சொல்லுகிறேன். இப்படியே நேராகப் போய் வலது பக்கம் திரும்பும், திரும்பி நேராகச்சென்றால் மூன்றுவாயில்களிருக்கும்; அவைகளில் நடுவாயில் வழியாக நுழையும்; அந்த வாயிலில் தலையை யிடித்துக்கொள்ளக் கூடாது தாங்கள், தெரியுமா?

விக். இல்லை, இல்லை; சொல்லும்.

விசி. தலையை யிடித்துக்கொள்ளாமல் உள்ளே சென்றால், இடது பக்கமாக ஒரு மார்க்கம் போகிறது—

விக். சரி! இளவரசர் எங் கிருக்கிறார் சொல்லுமென்றால் இதை யெல்லாம் யாரையா கேட்டது?—

விசி. முன்பே சொன்னேனே! அவசரப்படவேண்டாம், கேளுமையா. 'அவசரப்படேல்'; அந்த இடது பக்கம் போகிற வழியாகச் சென்றால், மேல் மாடிக்குச் செல்கிற படியொன் றிருக்கிறது. அந்தப் படியின்மே லேறிப் போய்த் தெற்கு முகமாக நின்று கொண்டு வடக்கே பார்த்தால், மூன்று மண்டபங்கள் தெரியும்; நடுவி லிருக்கும் சித்திர மண்டபத்தில் இளவரசர்—

விக். முன்பே சொல்ல லாகாதா இதை? சித்திர மண்டபத்திலா இருக்கிறார் இளவரசர்?

[அவசரத்துடன் எழுந்திருக்கிறார்.]

விசி. ஆம், சித்திர மண்டபத்தி லில்லை.

விக். இல்லையா!— என்ன ஐயா! விளையாடுகிறீரா என்ன? இளவரசர் எங்கு இல்லையென்று நான் கேட்டேன்?

விசி. அவசரப்படேல்' என்று முன்பே கூறினேனே! யார் அவசரப்படச் சொன்னது உம்மை?

விக். அங்கே யில்லாவிட்டால் இந்தச் சித்திர மண்டபக் கதை யெல்லாம் யார் உம்மைச் சொல்லச் சொன்னது?

விசி. உம்மை யார் அவசரப் படச் சொன்னது? அங்கு இல்லை, அங்கு போகவேண்டாமென்று சொல்ல வந்தேன், உமக்கு அவசரமா யிருந்தால் போம்.

விக். இல்லை, இல்லை, ஐயா, சொல்லும் சீக்கிரம்.

விசி. அந்த சித்திர மண்டபத்துக்குட் செல்லாமல் உமது மூக்குக்கு நேராகச் சென்றால், அதற் கிடது புறம் ஒரு வழி பிரிகிறது, அந்த வழியில் போகும் பொழுது கிழக்

கே பார்த்துக் கொண்டே மேற்குப் புறம் சென்றால், டீ! என்று உமது தலை ஒரு சுவற்றில் முட்டும்!

விக். ஏன் ஐயா? எனது தலை உடையவா வழி கேட்டேன் உம்மை?

விசி. 'அவசரப்படேல்'; அப்படிச் சென்றால் உமது இலேசான தலை உடையும்; ஆதலால் அப்படிப் போகாது, கிழக்கே நோக்கிக் கிழக்கே செல்லுமென் றல்லவோ சொல்ல வந்தேன்; 'அவசரப்படேல்!

விக். நல்ல 'அவசரப்படேல்'! நேரமாகிறது, சீக்கிரம் சொல்லும் இப்பொழுதாவது.

விசி. அவசரமாகவா இருக்கிறது? ஆனால் உமக்கு நீந்தத் தெரியுமா? சீக்கிரம் சொல்லும்.

விக். அவசரம் என்றால் உமக்குத் தெரிகிறதில்லை ஐயா!

விசி. ஆனால் அவசரமாக அந்த மேல் மாடியிலிருந்து தெற்குப் படிவழியாகக் கீழே இழிந்து, கண்ணை மூடிக் கொண்டு அவசரமாக நேரா யோடினால், அங்கிருக்கும் பாழும் கிணற்றில் வீழ்ந்து நீந்தலாம் அவசரமாக!

விக். ஐயா, எனக்குக் கோபம் வரும் அப்புறம், உம்முடன் விளையாடவா நான் வந்தேன்?

விசி. நான் அப்பொழுதே சொன்னேனே 'அவசரப்படேல், என்று.

விக். ஐயா! உம்மைக் கடைசி முறை கேட்கிறேன்; சொல்லுகிறீரா என்ன?

விசி. நானும் உமக்குக் கடைசி முறை சொல்லுகிறேன் 'அவசரப்படேல்.' இதோ சொல்லுகிறேன் கேளும். அந்தக் கிணற்றருகிற் போகாமல் மேற்குப் பக்கம் திரும்பி நேராக வாசனை பிடித்துக்கொண்டு மடைப்பள்ளிக்குச் சென்றால்—அங்கே இருக்கிறரையா—

விக். அப்பா! இளவரசரா?

விசி. இல்லை, எங்கள் அண்ணு!

விக். உங்கள் அண்ணுவா? இத்தனை நாழிகை பேசியதெல்லாம் உங்கள் அண்ணு இருக்குமிடந் தெரிந்துகொள்ளவா? நான் போய் மஹாராஜாவிடம் சொல்லுகிறேன்!

விசி. அவசரப்பட வேண்டாமையா, எனக்கு இளவரச ரிருக்குமிடந் தெரியாது; எங்கள் அண்ணு ஜோசியர்; அவரிடம் சென்று கேட்டால் ஜோசியம் பார்த்து இளவரசர் இப்பொழுது எங்கிருக்கிருரென்று கண்டறிந்து சொல்லுவார்; ஏதாவது தக்ஷிணை எடுத்துக்கொண்டு போம். 'அவசரப்படேல்.'

விக். நான் மஹாராஜாவிடம் சொல்லி உம்மை என்ன செய்விக்கிறேன் பாரும்! [கோபத்துடன் போகிருர்.]

விசி. ஐயா! 'அவசரப்படேல், அவசரப்படேல்"—ஐஐயோ! இதுபோய் ஏதாவது உளறும்; பிறகு காரியம் கெட்டுப்போம்; நாம் போய் அதற்கு முன்பாக ஏதாவது குளற வேண்டும். [போகிருன்.]

காட்சி முடிகிறது.



## இரண்டாவது காட்சி

இடம்—யுவராஜ பட்டணத்தில் ஆற்றங் கரையை யடுத்த ஓர் தென்னஞ் சோலை. காலம்—அந்திப்பொழுது.

லீலாவதி ஆண்வேஷம் பூண்டு சுலோசனையுடன் பேசிக்கொண்டு வருகிருள்.

சு. அக்காள், வழியில் உன்னை யாராவது கண்டுபிடித்திருப்பார்களாயின் என்ன செய்திருப்பாய்?

லீ. நான் எவ்வளவு ஜாக்கிரதையாக வந்தேன்! அதுவுமன்றி சாயங்கால மாய்விட்டதே; என்னுடன் நன்ருய்ப் பழகி வருபவர்களா லன்றி வேருெருவராலும் என்னை இந்த உடையி லிருக்கும்பொழுது இன்னு ளென்று கண்டறிவது மிகவும் கஷ்டம். நான் வந்தபொழுது

முதலில் நீயே கண்டுபிடிக்காமற் போயினையே!

சு. ஆமாம், அக்காள்; எப்பொழுது முதல் இந்த ஆண் வேஷந் தரித்துக்கொண் டிருக்கிறாய்?

லீ. இன்றைத்தினம் மத்தியானம் அரண்மனையில் உட்கார்ந்துகொண்டிருந்தபொழுது, பழைய ஞாபகங்களெல்லாம் என் மனத்திற்கு ஒவ்வொன்றாய் வந்தன. அப்பொழுது நான் சிறியவளா யிருந்தபொழுது சில நாட்களில் நமது தகப்பனார் தனக்கு ஆண் பிள்ளை யில்லையேயென்று எனக்கு ஆண்வேஷந் தரித்து வேடிக்கை பார்த்த விந்தையும் எனக்கு ஞாபகம் வந்தது. அந்த ஞாபகம் வரவே, நமக்கோ வயதாகிவிட்டது, இனி நாமெப்பொழுது அவ்வேஷந் தரித்துக்கொள்ளப் போகிறோம், கடைசி முறை நம தாசை தீர இன்றைத்தினம் அவ் வேஷந் தரித்துப் பார்ப்போமென்று தீர்மானித்து இவ் வாடை யாபரணங்களை யெல்லாம் தரித்து, எனது வடிவழகைப் பளிங்கின் முன்பாகப் பார்த்தேன்; அப்பொழுது ஐயோ! நமது சுலோசனை இதைப் பார்ப்பதற் கில்லையேயென்று ஓர் எண்ணம் உண்டாக, உடனே ஒருவரு மறியாதபடி உனக்கு இதைக் காண்பிக்க இங்கு வந்தேன்.

சு. அக்காள், இந்த ஆண் உடை உனக்குப் பொருந்தியதாகவே யிருக்கிறது. உன்னை நன்றாக அறியாதவர்கள் இப்பொழுது உன்னைக் காண்பார்களாயின் நீ ஒரு ஆடவனென்றே கூறுவார்கள்!—இதிருக்கட்டும், நாம் வீட்டிற்குள்ளே பேசிக்கொண் டிருந்தால் நல மல்லவா? இங்கே னழைத்துவந்தா யென்னை?

லீ. இங் கொருவரும் வரமாட்டார்கள், பயப்படாதே. இங்கு என்ன அழகாகக் காற்று வீசுகிறது. இக் குளிர்ந்த காற்றை அனுபவிக்காது வீட்டிற்குள்ளே அடைபட்டிருப்பதில் என்ன பிரயோஜனம்?—இதோ இக் கல்லின்மீது சற்றுநேரம் உட்கார்ந்துவிட்டு போவோம்.

[இருவரும் உட்காருகின்றனர்.]

சு. அக்காள் என்ன திரும்பித் திரும்பிப் பார்க்கிறாய்?

லீ. ஒன்றுமில்லை; சுலோசனா, உன்னைப்பற்றிப் பிதாவிடம் பேசத் தக்க சமயம் பார்த்துக்கொண்டே யிருக்கிறேன். இன்னும் எனக்குக் காலம் வாய்க்கவில்லை. நான் உண்மையை அவருக்கு எடுத்துக் கூறுவே னாயின் எப்படியும் அவர் உன்மீதுள்ள கோபமெல்லாந் தணிந்து உன்னை அங்கீகரிப்பா ரென்பதற்குத் தடை யில்லை; ஆயினும் எனக் கொன்று மாத்திரம் சந்தேகமாகவே யிருக்கிறது. பிறகு பிதா உன்னை ஸ்ரீதத்தராஜனுக்கு மணஞ் செய்து கொடுக்க யத்தனித்தால், எங்கு இளவரசர், ஓஹோ! இப் பெண் முன்பு இங்கு பாங்கியா யிருந்தவ ளல்லவா, என்று வேண்டாமென்றால் என்ன செய்கிறதென்று மாத்திரம் எனக்குச் சந்தேகமா யிருக்கிறது.

சு. இதைக் குறித்து நீ கவலைப்பட வேண்டியதில்லை:—அக்காள், நா னுனக்கு ஒரு ரகசியம் சொல்லுகிறேன் கேள். இதை ஒருவரிடமும் இப்பொழுது வெளியிடாதே. இளவரசர் என்மீது காதல் கொண்டு, என்னையன்றி வேறொரு ஸ்திரீயையும் மணம் புரிவதில்லையென்று எனக்கு வாக்களித்திருக்கிறார். நானும் அவர்மீது காதல் கொண்டிருக்கிறேன். ஆனால் அவருக்கு நான் சுலோசனை என்று தெரியாது. எல்லாம் பிறகு சொல்லலா மென் றிருக்கிறேன். அக்காள் நான் என் காதலராகிய இளவரசரையே மணம்புரியப் போகிறேன்.

லீ. ஆஹா! அப்படியா? மிகவும் சந்தோஷம்; சுலோசனா, இத்தனை காலம் வரையில் இதை என்னிடம் கூறாமலிருந் தாயே! சுலோசனா, நீ உன் காதலரைச் சீக்கிரம் மணம் புரிவாயாக!

[ஸ்ரீதத்தர் தூரத்தில் வருவதைக் கண்டு உரத்த சத்தமாய்]

அப்பொழுது என்னை மறக்காதே கண்ணே!

[சுலோசனையை முத்தமிடுகிறாள்.]

சு. இல்லை, இல்லை.

[இவர்கள் கடைசியில் பேசிய வார்த்தைகள் ஸ்ரீதத்தர் காதில் விழ, திரும்பிப் பார்க்க, லீலாவதியும் சுலோசனையும் ஆலிங்கனம் செய்து முத்தமிட்டுக் கொண்டிருப்பதைக் கண்டவுடன் இடி விழுந்தவர் போல் அசைவற்று நின்றுவிடுகின்றார். சிறிது தெளிந்தவுடன் கோபாவேசங் கொண்டு தன்னுடைய வாளை நாட, அது உரையி லில்லா திருக்கக் கண்டு, காம்பிலியை நோக்கி விரைந்தோடுகிறார்.]

அக்காள், என்ன சிரிக்கிறாய்?

லீ. ஒன்று மில்லை,—சுலோசனா, உன்மீது எப்பொழுது இளவரசர் காதல் கொண்டார்? இவ் விஷயங்களை யெல்லாம் எனக்கு விளங்கச் சொல்.

சு. அக்காள் வீட்டிற்குள்ளே வா, எல்லாம் விளங்கச் சொல்கிறேன். இப்பொழுது—[திடீரென் றெழுந்திருந்து] அக்காள்! என் மோதிரத்தைக் காணோமே!

லீ. என்ன! என்ன மோதிரம்!

சு. [கண்ணீர் ததும்ப] ஐயோ! அது எனக்கு இளவரசர் கொடுத்த மோதிர மாயிற்றே! அதை எப்பொழுதும் என் விரலை விட்டு எடுக்க லாகாதென்று கூறினரே! ஐயோ! எங்கேயோ போயிற்றே அந்த மோதிரம்!

லீ. சுலோசனா, நீ யிருக்கு மிடத்திற்கு வந்தபொழுது அங்கே உன் படுக்கையின்மீது ஓர் மோதிர மிருக்கக் கண்டேன். நீ யதை அங்குக் கழற்றி வைத்தாயென்றல்லவோ பார்த்தேன். அம் மோதிரத்தையா தேடுகிறாய்?

சு. ஒரு வேளை என் விரலினின்றும் கழன்று அது அங்கு வீழ்ந் திருந்தாலு மிருக்கும்; வா வா, போய்ப் பார்ப்போம். [இருவரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.



## மூன்றாவது காட்சி

இடம்—காம்பிலியினின்றும் யுவராஜ நகரத்திற்குச் செல்லும்
பாதையைச் சார்ந்த ஓர் வெளி நிலம்.
காலம்—நள்ளிருள்.

ஆண் வேஷத்துடன் லீலாவதி வருகிறாள்.

லீ. [தனிமொழி] ஆஹா! ஸ்ரீதத்தராஜனே! உமக்கு இது தக்க தண்டனையே! என்னுடைய கோரிக்கையெல்லாம் பாழாக்கி என் மனத்தைப் புண்படுத்தினீர், உண்மையே; ஆயினும் உம்மைச் சும்மாவிட்டேனா நான்? இனி க்ஷணமேனும் உம்முடைய மனத்திற்கு அமைதி என்பது இருக்கப் போகிறதோ? இப்பொழுது நீர் அனுபவிக்கும் வேதனையைவிட நரக வேதனை கூடியமட்டும் நலமானது என்று உமக்குத் தோற்றவில்லையோ? அப்பொழுதே என் வேண்டுகோளுக் கிசைந்திருந்தால்!— ஆஹா! சுலோசனா, உன்னுடைய கர்வம் அடங்கும் காலம் வந்து விட்டதல்லவா? உனக்கும் தகுந்த சிக்ஷையையே நான் விதித்தேன்! எப்படியும் ஸ்ரீதத்தராஜன் உன்னைச் சீக்கிரத்தில் மேலுலகத்திற்கு அனுப்புவார் என்பதற்குச் சந்தேகமில்லை. உன் காதலரைக்கொண்டே உன்னைத் தண்டித்தல் முறைமை! நீ இறந்தபின், உன் காதலர் தானாக வலிய வந்து, தன்னை மணம் செய்துகொள்ளும்படி என்னை வேண்டுவதை நீ மேலுலகத்திலிருந்து காண்பாய்!—ஸ்ரீதத்தராஜன் சென்ற வேகத்தினாலும், முகக் குறிப்பினாலும் இந் நேரம் சுலோசனை இறந்திருப்பாளென்றே நினைக்கிறேன்—

ஸ்ரீதத்தர் விரைந்தோடி வருகிறார்.

ஸ்ரீ. ஆஹா! பாதகா! உன்னைக் கண்டுபிடித்துவிட்டேன்!

[லீலாவதியின் கழுத்தைப் பிடித்துக்கொண்டு தன் கட்டாரியை ஓங்கிக் குத்தப் போகும்பொழுது அவள் தலையி லணிந்திருந்த உடை கீழே விழ, ஸ்ரீதத்தர் உண்மை யறிந்து இடி விழுந்தவர்போல் அசைவற்று நின்று விடுகிறார்.]

[சற்றுப் பொறுத்து] ஆஹா! என்ன மதிமோசம் போனேன்!

[லீலாவதியை மறுபடியும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு கட்டாரியை ஓங்கி]

ஆ! லீலாவதி, எல்லா உண்மையையும் ஆதியோடந்தமாகக் கூறுகிறுயா என்ன?

லீ. ஸ்ரீதத்தராஜனே, என்னைக் கொல்லத்தானே போகிறீர்? கொல்லும்!

ஸ்ரீ. ஹா! பாதகி!—

லீ. ஆயினும் என்னைக் கொல்லுமுன் உமக்குச் சந்தோஷத்தைத் தரும்படியான சில சமாசாரங்களைக் கூறுகிறேன். கேட்க விருப்ப மிருந்தால் கேளும்; இல்லாவிட்டால் இப்பொழுதே என்னைக் கொல்லும்.

ஸ்ரீ. பேயே! நான் உனது உயிரை வாங்குமுன் சீக்கிரம் சொல்!

லீ. ஸ்ரீதத்தராஜனே, உமது காதலியாகிய சாவித்திரியே எனது தங்கையாகிய சுலோசனை!

ஸ்ரீ. ஆஹா! அப்படியா?—

லீ. அந்தச் சுலோசனையை உறங்கும்பொழுது காட்டில் எடுத்துச் சென்று கொன்றுவிடும்படி கொலையாளிகட்குக் கட்டளை யிட்டவளும், ஒரு பாபமு மறியாத அவள் மீது குற்றஞ் சாற்றி அவள் பிதா முதலிய எல்லோரும் அவளை வெறுக்கும்படி செய்தவளும், பிறகு கொலையாளிகளிடமிருந்து அவள் தப்பி வந்து உமது அரண்மனையிலிருப்பதைக் கண்டு பயமுறுத்தி அவ்விடமிருந்து அவளை வெளியிற் போகச் செய்தவளும், அவள் உமக்கெழுதிய நிருபத்தில் ஒன்பது நாழிகை என்பதை ஆறு நாழிகை என்று மாற்றி உம்மைச் சந்தித்தவளும், நீர் அவளுக்குக் கொடுத்த மோதிரத்தை அவளிடமிருந்து அபகரித்து எடுத்துப் பிரதாபசீலரிடம் கொடுத்து உமது மனத்தைப் பேதிக்கச் செய்தவளும், ஆண் வேடம்பூண்டு

அவ ளருகிலிருந்து உமது மனத்தைச் சற்று முன்பாகக் கலக்கியவளும், நீர் அன்று அரச சபையில் ஒருகாலும் மணம்புரியேன் என்று கூறி, பிறகு அவள் என்ன வேண்டியும் இணங்காது வெறுத்த—இந்த லீலாவதியே! லீலாவதியே!

ஸ்ரீ. ஐயோ! என்ன மதிமோசம் போனேன்! ஐயோ! ஒரு பாபமு மறியாத என் காதலியைக் கமலாகரன் இந்நேரம் கொன்றுவிட்டிருப்பானே! கண்ணே!—கண்ணே!—

[லீலாவதியை விட்டுவிட்டு வெறி கொண்டவர்போல் ஓடுகிறார்.]

லீ. சரி! சுலோசனை இந்நேரம் இறந்திருப்பாள்! நீரும் இறந்து அவள் சென்ற இடத்திற்குப் போம்!—நான் ஏன் தாமதிக்கிறேன்? நான் இனிச் செய்யவேண்டியது ஒன்றுதா னிருக்கிறது! யோசிப்பா னேன்?

[ஸ்ரீதத்தர் அங்கே போட்டுவிட்டுச் சென்ற கட்டாரியை கையி லெடுத்துக்கொண்டு]

ஆஹா! நம்முடைய எண்ணங்களெல்லாம் என்ன வாயின? எப்படி எப்படி முடியுமென்று எண்ணி யிருந்தோம், எப்படி எப்படி முடிந்தன!—ஆயினும் பெரிதன்று; நம்முடைய ஸ்திதிக்குப் பிறரையும் கொண்டு வந்து விட்டுத்தானே போகிறோம்!—இனி யோசித்துப் பய னென்ன? இந்த உடைவாளே நமது துன்பத்திற்குத் தகுந்த ஒளஷதம்—ஆயினும் ஆண் உடையோடிருக்கிறோமே! சீ!—அப்படி யல்ல; நா மிவ்வாறு இறக்கலாகாது; இந்த உடையுடன் இறந்திருப்பதை யாராவது கண்டால் நமக்கு அவமானத்துக் கிடமாகும்; ஒருவரு மறியாதபடி இப்பொழுது அரண்மனைக்குச் சென்று இந்த உடையை மாற்றிப் பின்பு இறக்கவேண்டும். செய்வன திருந்தச் செய்யவேண்டும்! [போகிறாள்.]

காட்சி முடிகிறது



## நான்காவது காட்சி

இடம்—அரண்மனையில் ஓர் அறை. காலம்—நடுராத்திரி.

லீலாவதி ஓர் கரத்தில் கட்டாரியுடனும், மற்றொரு கரத்தில் ஓர் நிருபத்துடனும் நின்றுகொண் டிருக்கிறாள்.

லீ. அவளுக்கு நாம் செய்த கெடுதிகட்கெல்லாம் இவ்வளவாவது நன்மை செய்கிறோமே! இந் நிருபத்தைப் பிதா பார்ப்பாராயின் என்னைத் தன் பெண்ணென மதியார், உண்மையே; ஆயினும் சுலோசனையின்மீதுள்ள கோபமெல்லாம் தணிவார், இதை நன்றாகத் தெரியும்படி இங்கு வைப்போம்—ஆஹா! என்னுடைய வாழ்வு இவ்வண்ணம் முடியுமென்று நான் கனவிலும் நினைத்ததில்லை! ஹா! [பெருமூச் செறிகிறாள்.]
இப்பொழுது நாம் வருந்தி என்ன பிரயோஜனம்? முதலிலேயே இருக்கவேண்டும் இந்தப் புத்தி! ஆம்! என் கெடு மதி என்னையே கெடுத்தது!— என்னுடைய யுக்தியும் நிக ரற்ற புத்தியும் எதற்காயின? என்னுடைய சூழ்ச்சிகளெல்லாம் என்ன வாயின? இவைகளெல்லாம் என்னை இக் கதிக்குக் கொண்டு வருவதற்கன்றோ பயன்பட்டன! ஐயோ! பிறருக்குக் கெடுதி நினைத்தபடியினாலன்றோ எனக்குக் கேடு சம்பவித்தது! ஆ! என் புத்தி முதலியவற்றையெல்லாம் சிறு வயதுமுதல் நல்ல விஷயங்களிலேயே உபயோகித் திருப்பேனாயின் இக் கதி சம்பவித்திருக்குமோ? ஒரு காலும் சம்பவித்திராது. சுலோசனையைப்போல் பிறருக்கு நன்மையே நாடி வந்திருப்பேனாயின் நான் நலமான ஸ்திதியில் இருந்திருப்பேன் என்பதற்குச் சந்தேகமே யில்லை. என்னுடைய கெட்ட எண்ணங்களுக்கும் புத்திக்கும் தக்க தண்டனையையே தெய்வம் எனக்கு விதித்தது! நான் பிறருக்குச் செய்த தீமைகளெல்லாம் எனக்கேதாவது உண்மையில் சந்தோஷத்தைக் கொடுத்தனவா? அதுவுமில்லையே! நான் பிறந்தும் பிறவாப் பாவியானேனே!

சீ! இனி என்னைப்போல் இவ்வுலகில் ஒருவரும் பிறவா திருப்பார்களாக! நான் சீக்கிரம் இறத்தலே நலம். ஆயினும், நான் அவளுக்கு அநேக தீங்குகளைச் செய்த போதிலும், சுலோசனை கமலாகரனுடைய கையினல் இறவாமற் பிழைப்பா ளாயின், அவள் மாத்திரம் எனக் காக வருந்துவாள் என்பதற்குச் சந்தேகமேயில்லை! ஆ! சுலோசனா! நீயே வென்ருய், நானே தோற்றேன்! எப் பொழுதும் சத்தியமே நிற்கும், தீமையே அழியும்! சந் தேக மென்ன? இதற்குப் பிரத்தியக்ஷமாகப் பிரமாணம் வேண்டுமென்றால், இதோ நான் இருக்கிறேனே!—ஆ! விதியே! விதியே!—நான் இறப்பதற்கு வருத்தப்பட வில்லை; ஆயினும் நான் இறப்பதற்கு முன் எவரெவர் களுக்குத் தீமை செய்தேனே அவரவர்களுடைய மன் னிப்பைக் கேட்காமற் போகிறேனே என்று மாத்திரம் எனக்கு வருத்தமா யிருக்கிறது—அதற்கு நாம் இனி என்ன செய்யலாம்?—கண்ணே சுலோசனா! நீ பிறந்தது முதல் இதுவரையில் எனக்கு ஒரு தீங்கும் செய்த தில்லை; நான் உனக்கு ஒரு நன்மையும் செய்ததில்லை! உன்னுடைய க்ஷேமத்தை யெல்லாம் கெடுத்து முடிவில் உன் னுயிருக்கே தீங்கு விளைத்தேன். கண்ணே! நீ யென்னை மன்னிப்பாய் என்று கேட்கவும் என் நா எழ வில்லையே! ஆயினும் உன்னுடன் பிறந்த சகோதரி யென்பதற்காக என்னை மன்னிப்பாய் என்னருஞ் செல்வ மே! மங்கையர்க் கரசியே! நீ கமலாகரனல் கொல்லப் படாமல் ஸ்ரீதத்தராஜனுகிய உன் காதலனுடன் கூடி புத்திர பாக்கியம் பெற்று உனது தந்தை தாயர் முதலா னேர் களிக்கவும், உலகத்தோ ரெல்லாம் உன்னைத் தா யெனப் புகழவும், உனது பர்த்தா உன்னைத் தன் கண் ணின் கருமணிபோல் பாராட்டவும், நீடூழி காலம் சுகமாய் வாழ்வாயாக! அப்படி நீ சுகமாய் வாழும்பொ ழுது என்னைப்பற்றி யெப்பொழுதாவது நினை! அவ்வள வே நான் உன்னை வேண்டிக் கொள்வது!—ஸ்ரீதத்தராஜ

னே! நீரும் என்னை மன்னிப்பீராக! உம்மீது கொண்ட காதலினலேயே இவ்வளவு தீங்குகளை யெல்லாம் நான் செய்தேன்! நான் செய்த தீங்கிற்குத் தக்க தண்டனை நான் அனுபவிக்கிறேன், ஆகவே, நீர் என்னை மன்னிக்க வேண்டும்! உமக்கே தகுந்த மனைவியாகிய சுலோசனை யுடன் கூடி இணைபிரியாமலும் அக்கற்பிற் கரசியின்மீது என்றும் சந்தேகம் கொள்ளாமலும் நீடூழி காலம் சக்ர வர்த்தியாக வாழ்வீராக!—எனது தந்தை தாயரே! வீணை உம்முடைய மனத்தைப் புண்படுத்தினேன், என்னை மன்னிக்கவேண்டும். உமக்கு லீலாவதி யென்று ஒரு புதல்வியிருந்தா ளென்பதையே மறந்து விடுங்கள். சுலோசனை ஒருத்தியே உமக்கு புதல்வி இனி!—தந்தவக்கிரா! துன்மதி! உங்களிருவருடைய உயிரையும் நான் போக்கினேன், உங்களையும் நான் மன்னிப்புக் கேட் கிறேன்!—உலகத்தோரே! உமக்கொன்று நான் கூறுகி றேன்! கேளும்! நான் பிறருக்குத் தீங்கு நினைத்தேன்; முடிவில் அத் தீங்கெல்லாம் என்னையே சூழ்ந்தது! நீர் நலம்பெற விரும்புவீராயின் பிறருக்கு ஒருகாலும் தீங்கு நினைக்கவேண்டாம்! கெடுவாள் கேடு நினைப்பாள்!!!— இனி நாம் தாமதிக்கலாகாது. [கட்டாரியை ஓங்கி] ஸ்ரீதத்தராஜனே! நீர் என்மீது அருள் புரியா விட்டா லும் உம்முடைய கட்டாரியாவது என் துயரத்தைத் தணிக்கிறது!

[தன் மார்பில் கட்டாரியால் குத்திக் கொண்டு கீழே விழுகிறாள்.]

ஆ! சுலோசனு,—ஸ்ரீதத்த— [இறக்கிறாள்.]

காட்சி முடிகிறது.



## ஐந்தாவது காட்சி

இடம்—ஓர் படுக்கை அறை. காலம்—நள்ளிருள்.

சுலோசனை ஓர் மஞ்சத்தின்மீது படுத்துறங்குகிறாள்.

கமலாகரர் மெல்ல வருகிறார்.

[தனக்குள்] ஹா! இதுவோ என்னுடைய விதி! ஐயோ! நான் இதுவரையில் ஒரு பாபமும் செய்தறியேனே! ஈசனே! இப்படியும் என் தலையில் எழுதி வைப்பீரா? இந்தத் தர்ம சங்கடத்திற்கு நான் என்ன செய்வேன்! என்ன செய்வேன்! இம் மஞ்சத்தில் உறங்கும் பெண் மணியை நான் கொல்வேனாயின், ஒரு பாபமு மறியாத அருந்ததிக் கொப்பான கற்பிற் கரசியைக் கொன்ற பாபம் என்னைச் சூழுமே. ஐயோ! நான் எவ்வாறு அப் பாபத்தைத் தரிப்பேன்! இதை நினைத்தாலும் என் நெஞ் சம் பகீர் என்கிறதே! நான் கொல்லாமற் தாமதிப்பே னாயின் என் நண்பனுக்குத் துரோகம் நினைத்தவனாவேன். அவர் சொற்படிச் செய்யாதிருப்பதை அறிவாராயின், என் கண் முன்பாக அவர் உயிர்விடுவா ரென்பதற் கைய மில்லை. அதனை நான் எவ்வாறு கண்டுயிர் வாழ்வேன்! அவர் இறந்தாராகில் இப் பெண்மணியும் இறப்பா ளன்றோ? இப் பாபமெல்லாம் பிறகு யாரைச் சூழும்?—ஈசனே! ஏன் என்னை இவ் வுலகில் பிறப்பித்தீர்?—இதற் கோ பிறப்பித்தீர்?—ஹா! நான் அழுதென்ன பயன்? என்ன பயன்? கால தாமதமாகிறதே!—இம் மங்கை யர்க் கரசியையும் கொன்று நாமும் இறக்க வேண்டியது தான்! ஐயோ! என்னுடைய வார்த்தையைக் கேட்டு எனது நண்பர் சற்றுப் பொறுக்கலாகாதா? ஐயோ! அவருக்கு ஏனோ புத்தி இவ்வாறு மழுங்கிற்று? அவர் இந்தச் சாவித்திரியின்மீது கொண்டிருக்கும் சந்தேக மெல்லாம் ஏதோ சித்தப் பிரமை யென்பதற்குச் சந்தேக

மே யில்லை! நான் மும்மூர்த்திகளுக்கு முன்பாகப் பிர மாணஞ் செய்வேனே! நண்பனே! அவசரப்பட்டு எனக் கென்ன கொடுமையான கட்டளை யிட்டீர்! ஐயோ! பிறகு நினைந்து வருந்தப் போகிறீரே! அப்பொழுது உமக்கு யார் தேறுதல் சொல்லப் போகிறார்கள்?—ஹா! நான் விபசனப்பட்டென்ன பயன்? யார் விதி யாரை விட்டது?—ஐயோ! என் காலை எடுத்து ஒரு அடி வைக் கவும் மனம் எழுவில்லையே! என் கையால் நான் எவ்வாறு இவ் வருந்ததியின் உயிரைப் போக்கப் போகிறேன்! ஐயோ! என துயிரை மாய்த்துக் கொள்ளவா?—என்ன பிரயோஜனம்? என்ன பிரயோஜனம்? என துயிரை மாய்த்துக் கொள்வதினால் என் நண்பனுடைய கட்டளை யை நிறைவேற்றியவனாவேனா? அப்பா! அப்பா!—

[மஞ்சத்தி னருகிற் செல்கிறார்.]

அம்மட்டும் சாவித்திரி உறங்கும் சமயத்தில் வந்தேனே! ஐயோ! என் நண்பனுடைய புத்தியெல்லாம் எங்கே போயிற்று? முகத்தைப் பார்க்கும்பொழுதாவது தெரி யாதா? இதோ லக்ஷ்மியைப்போல் உறங்கும் பெண் மணி கெட்ட நடத்தை யுடையவள் என்று எந்தக் கொடும் பாவியும், ஒரு முறை இப் பெண்மணியைக் கண்டபின் கூறமாட்டேனே. தாயே! தாயே! உன் னைக் கொல்ல வந்திருக்கிறேன் நான்; இதற்கென்றே இக் கொடும் பாவி நா னிப்புவியில் உதித்தேன்! அம் மணி! என்னை மன்னிக்க வேண்டும்! ஐயோ! என் மனம் ஒப்பவில்லையே! என் கை எழுவில்லையே! அம்மணி! நீ யுறங்கும்பொழுது உன்னைக் கொன்று தீராப் பழியைப் பெற என் கையில் கட்கத்தை ஏந்தினேன்! அம்மணி! என்னை மன்னிக்க வேண்டும். தாயே! நீ பதிவிரதை யென்பது உண்மையாயின் இதோ உன்னை நான் கொல் கிறேன், உன துயிர் போகாதிருக்க வேண்டும்!

[கட்டாரியை ஓங்குகிறார்.]

ஸ்ரீதத்தர் வேகமாக ஓடி வருகிறார்.

ஸ்ரீ. பொறு! பொறு! கமலாகரா!

[கமலாகரர் கரத்தைப் பிடித்துக்கொண்டு தடுக்கிறார். கமலாகரர் அசைவற்று நின்று விடுகிறார். ஸ்ரீதத்தர் மஞ்சத்தின்மீது மூர்ச்சையாகி வீழ்கிறார். சுலோசனை திடுக்கிட்டு எழுந்திருக்கிறாள்.]

சு. என்ன! என்ன! பிராணநாதா?

ஸ்ரீ. [மூர்ச்சை தெளிந்தெழுந்து சுலோசனையைக் கட்டிக்கொண்டு] கண்ணே! கண்ணே! நான் என்ன தப்பிதஞ் செய்ய விருந்தேன்!— [கமலாகரரை நோக்கி] அப்பா! கமலாகரா! இன்று நீ எனக்கு உயிரை யளித்தாய்; என்னை மீளா நரகத்தினின்றும் மீட்டனை. தோழா! நீ கூறினதெல்லாம் உண்மையே! நான் எண்ணியதெல்லாம் தவறே! வீணில் மதிமோசம் போனேன். கமலாகரா, நீ இவ்வளவு நேரம் தாமதியாது முன்பே என் குரூரமான கட்டளைப்படி நடந்திருப்பா யாயின், பிறகு என் கதி என்னவா யிருக்கும்? நான் செய்த தப்பிதத்திற்கு இந்தச் சிறிது பொழுதுக்குள் அனுபவித்த யம வாதனையே போதும்!

சு. பிராணநாதா, என்ன சமாசாரம்? என்ன சமாசாரம்?

ஸ்ரீ. அப்பா, கமலாகரா! நீ செய்த மகோபகாரத்திற்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்? என் உயிரை அளித்தாலும் போதாதே!

கம. ஐயனே, தாம் எனக்குச் செய்த மகோபகாரத்திற்கு நான் உமக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேனென் றல்லவோ யோசித்துக்கொண் டிருக்கிறேன்; தாம் சற்றுத் தாமதித்து வந்திருப்பீராயின் என்னை எக்காலமும் சிரஞ்சீவியாய் நரகத்தில் மூழ்குவிக்கும்படியான கொடிய செய்கையைப் புரிந்திருப்பேனே! அதி

னின்றும் என்னைத் தப்புவித்தீரே! அதிருக்கட்டும் ஐயனே, நான் உம்மை வேண்டிக் கொள்ளுகிறேன். இனி யாவது சாவித்திரியின்மீது ஒருபொழுதும் சந்தேகங் கொள்வ தில்லையென்று எனக்கு சத்தியஞ் செய்து தாரும்.

ஸ்ரீ. அப்படியே தடை யென்ன? ஒரு முறை பட்டது போதாதா? இதோ கமலாகரா, இனி ஒருகாலும் நான் என் காதலியாகிய சாவித்திரியின்மீது சந்தேகங் கொள் வதில்லை. இது சத்தியம்.

சு. பிராணநாதா, இதெல்லா மென்ன? எனக்குச் சொல்ல லாகாதா?

ஸ்ரீ. இதோ சொல்லுகிறேன், கமலாகரா, ஆனல் உன்னிடம் ஒன்று கூற மறந்தேன்; கண்ணே, நீயும் இதைக் கேட்க வேண்டும். 'நான் பாங்கியாகிய சாவித்திரியின்மீது காதல்கொண் டிருக்கிறேன் உண்மையே; ஆயினும் பராக் கிரமகேதுவின் இரண்டாவது பெண்ணாகிய சுலோசனை யை விவாகஞ் செய்துகொள்ளப் போகிறேன் சீக்கிரத் தில்!

கம. ஐயனே! இதென்ன சமாசாரம்?

சு. பிராணநாதா! இது உமக் கெப்படித் தெரிந்தது?

ஸ்ரீ. காதற்கிளியே, இதுவரையில் இவ் வுண்மையை ஏன் என்னிடம் கூறாது ஒளித்து வைத்தாய்? இதை முன்பே என்னிடம் கூறியிருப்பையாயின் ஒரு கஷ்டமு மில்லா மற் போயிருக்குமே?

கம. ஆனல் சாவித்திரியா சுலோசனை?

ஸ்ரீ. ஆம், கமலாகரா! என் காதலியும், சாவித்திரியும் சுலோ சனையும் எல்லாம் இப் பெண்மணியே!

[சுலோசனையை முத்தமிட்டு தனக்குள்]

அம்மணி! அம்மணி! எல்லாம் உமது கருணை!

பராக்கிரமகேதுவும், காந்திமதியும் பரிஜனங்களுடன் வருகிறார்கள்.

சுலோசனை அவர்களைக் கண்டதும் விரைந்தோடித் தன் தாயாரைக் கட்டிக்கொள்ளுகிறாள்.

கா. கண்ணே! சுலோசனு! உன்னையாவது நான் உயிருடன் காணப் பெற்றேனே! நீயும் இறந்திருந்தால் என் கதி என்ன வாகும்! கண்ணே! இன்று என் வயிற்றில் நீ பாலை வார்த்தாய்! இன்று நான் உன்னை மறுபடியும் பெற்றெடுத்தேன்! நீ இங்கிருப்பதைப்பற்றி ஒரு வார்த்தையாவது யாருக்காவது கூறியிருக்க லாகாதா? போனது போகட்டும்! இன்று நீ ஓர் பெரிய ஆபத்தினின்றும் தப்பியது நானும் உனது தந்தையும் செய்த புண்ணியமே.

பரா. ஆ! ஸ்ரீதத்தராஜனே! சற்றும் யோசியாமல் என்ன காரியம் செய்ய விருந்தீர்? தம்மையும் எங்களையும் எல்லோரையும் சாமளவும் துக்க சாகரத்தில் அமிழ்த்த விருந்தீரே! சற்றுவது யோசித்திருக்க லாகாதா? இவ் விஷயத்தைப் பற்றி எங்களில் யாரிடத்திலாவது ஒரு வார்த்தையும் கூறுமற் போனீரே; அதைப்பற்றி உம்மை கடிந்துகொள்வதிற் பய னில்லை. உமக்கும் இதுவரையில் உண்மை இன்னதென்று தெரியாம லிருந்தது போலும். ஆஹா! லீலாவதி—

சு. தந்தையே, அக்காள் லீலாவதி எங்கே?

கா. [ஓர் புறமாக பராக்கிரமகேதுவுக்கு] பிராணநாதா, லீலாவதியைப் பற்றி ஒரு சமாசாரமும் நாம் சுலோசனைக்கு இப்பொழுது கூற லாகாது. நடந்த விஷயங்களை யெல்லாம் சுலோசனை கேட்டால் மிகவும் வருத்தப்படுவாள். ஆதலால் இப்பொழுது ஒன்றுங் கூறுது பிறகு மெல்லக் கூறுவோம்.

பரா. ஆம், ஆம், அது உண்மையே.—

[ஸ்ரீதத்தரை ஓர் புறமாக அழைத்துக் கொண்டுபோய்]

ஸ்ரீதத்தராஜனே, நீரும் லீலாவதியைப் பற்றியும் நடந்த விஷயங்களைப் பற்றியும் இப்பொழுது சுலோசனைக்குத் திடீரென்று ஒன்றும் கூறவேண்டாம், பிறகு மெல்லக் கூறுவோம் இப்பொழுது லீலாவதி இறந்ததைப்பற்றிச் சுலோசனை கேள்விப்படுவாளாயின் மிகவும் வருந்துவாள்.—

ஸ்ரீ. உம்முடைய மூத்த பெண் இறந்துவிட்டாளோ?

பரா. மெல்லப் பேசும். ஆம், நடந்த விஷயங்களையெல்லாம் ஆதியோடந்தமாக எனக்கு ஒரு நிருபத்தில் எழுதி வைத்து விட்டுத் தன்னுயிரைத் தானே மாய்த்துக் கொண்டாள்.

ஸ்ரீ. அப்படியா சமாசாரம்!

சு. அம்மா என்ன பேசாம லிருக்கிறீர்களே? அக்கா ளெங்கே?

காங். அப்புறம் சொல்லுகிறேன். இதோ சக்ரவர்த்தி முதலானோ ரெல்லோரும் வருகிறார்கள்.

வாசவதத்தர், சித்திரரேகை, பத்மாக்ஷி, பரிஜனங்கள் புடைசூழ வருகின்றனர்.

சிறிது பின்பாகக் குணசேனனும், விசித்திரசர்மனும் வருகிறார்கள்.

ஸ்ரீதத்தர் தன் பிதாவுக்கு நமஸ்காரம் செய்ய, அவர் தன் மகனை ஆலிங்கனம் செய்கிறார்.

பத்மாக்ஷி சுலோசனையைக் கட்டி முத்தமிடுகிறாள்.

வா. ஆ! ஸ்ரீதத்தா, இவ் விஷயங்களையெல்லாம் பற்றி இதுவரையில் என்னிடம் ஒரு வார்த்தையாவது நீ கூறவில்லையல்லவா! சுலோசனை இங்கு அரண்மனையில் இருந்ததையும், நீங்கள் ஒருவர்மீ தொருவர் காதல்கொண் டிருந்ததையும், என்னிடம் நீ கூறியிருப்பாயாயின் நான் எவ்வளவு சந்தோஷத்துடன் உங்க ளிருவருக்கும் விவாகம்

செய்வித்து மகிழ்ந்திருப்பேன்! இச் சங்கடங்களெல்லாம் ஒன்றும் நேர்ந்திருக்காதே! சுலோசனையை யன்றோ உனக்கு முதலில் விவாகஞ் செய்யத் தீர்மானித் திருந் தது!

ஸ்ரீ. ஐயனே, என்னைத் தாங்கள் மன்னிக்கவேண்டும். சற்று முன்பாகத்தான் இவ் விஷயங்களி னுண்மையெல்லாம் எனக்குத் தெரிந்தது.

பத். [சுலோசனையின் கரத்தைப்பற்றி வாசவதத்தர் முன்பு அழைத்துக் கொண்டுபோய்] அண்ணா, நான் முன்பே கூறினேனே, என் வார்த்தையை நம்பமாட்டே னென்றீரே! சுலோசனையை இளவரசர் பார்ப்பாராயின் எப்படியும் அவளை மணம் புரிய விரும்புவாரென்று கூறினேனோ இல்லையோ? அதன்படி முடிந்ததா இல்லையா? தெய்வாதீனத்தால் எல்லாம் என்னிஷ்டப்படியே முடிந்தது; அண்ணா, ஸ்ரீதத்தரும் சுலோசனையும் ஒருவர்மீ தொருவர் காதல் கொண் டிருக்கிறார்க ளென்றுதான் உமக்குத் தெரியுமே; இனித் தாமதியாது அவர்களுக்குச் சீக்கிரத்தில் விவா கஞ் செய்துவிடவேண்டும்.

வா. அதற்குத் தடையென்ன? அப்படியே செய்வோம்.

பரா. [நகைத்துக்கொண்டே] ஓஹோ! பார்த்தாயா காந்திமதி, தந்தை தாய் நாம் இருக்க, சுலோசனைக்கு விவாகத்தை இவர்களே தீர்மானித்து விடுகிறார்கள்!

வா. பராக்கிரமகேது, இது உங்களுக்கு சம்மதிதானென்று எனக்கு முன்னமே தெரியுமே.

பரா. ஆம் சந்தேக மென்ன? நான் விளையாட்டாகச் சொன் னேன்.

விசி. [ஓர் புறமாக குணசேனனுக்கு] ராஜ குமாரத்தியின் பெய ரென்ன?

குண. [ஓர் புறமாக விசித்திரசர்மனுக்கு] பராக்கிரமகேதுவின் இரண்டாம் புதல்வியின் பெயரா? சுலோசனை.

விசி. அப்படியா சமாசாரம்? சரிதான்; மஹாராஜா, எனக்கு எல்லா விஷயமும் தெரிந்து விட்டது; முன்பு, ஏனையா இவ் வுலகத்தை யெல்லாம் வெறுத்திருக்கிறீர் என்று கேட்டதற்கு ஸ்ரீதத்தர், இவ் வுலகத்தி லொன்றுந் தோற்றவில்லை, எல்லாம் மாயையாக இருக்கிற தென்று கூறினர்; சரி, கண் நன்ருகத் தெரியவில்லையே யென்று இப்பொழுது சுலோசனையைப் பிடித்தார்! ஐயா, யோகீஸ்வரரே! இப்பொழுது உமது கண்கள் நன்ருக விளங்குகின்றன போலும்?

ஸ்ரீ. ஆம், விசித்திரசர்மா, இப்பொழுது என் கண்கள் நன்ருய் விளங்குகின்றன.

விசி. அதிருக்கட்டும், யோகியாரே, சற்று முன்பாக ஸ்திரீகளைக் கண்ணெடுத்தும் பார்க்கலாகாது என்று கூறிக் கொண் டிருந்தீரே, இப்பொழுது தம்முடைய பக்கத்தில் யார் நிற்கிறது?

ஸ்ரீ. விசித்திரசர்மா, என் அன்னை முற்காலத்தில் கூறிய வாக்கியத்தி னுண்மையை இன்றே கண்டேன். என்னை யொத்த குணமுடையவர் சிறு வயதில் துறவறத்தைப் பூணுதல் அசாத்தியம். இவ்வயதில் அதை மேற்கொள்ள முயலுதலும் தவறு; என்போலியர் சில காலம் இல் லறத்திலிருந்து, பிறகே துறவறத்தை நாடவேண்டும்.

கம. ஐயனே, உமது அன்னை இருந்து இதைப் பார்த்துச் சந்தோஷப்பட இடமில்லாமற் போயிற்றே!

ஸ்ரீ. கமலாகரா, நீ அப்படி ஒருகாலும் எண்ண வேண்டாம்; என தன்னை இவ் வுலகை நீத்தபோதினும் அவர்களறி யாத விஷய மன்று இது.

வா. ஸ்ரீதத்தா, உன்னை நான் இன்று மறுபடியும் பெற்றெடுத்தேன்!

“மகன்றந்தைக் காற்று முதவி யிவன் றந்தை
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்”

என்றவாறு உன் கடமையை இன்றே நிறை வேற்றினை; கண்மணி, உனது பெருமையை நன்று யறியாது உன்னைப் பலவாறாகத் துன்பப் படுத்தினேன்; என்னை மன்னிப்பாயாக.

ஸ்ரீ. ஐயனே, நானன்றோ உமது மன்னிப்பைக் கேட்கவேண்டும்.

வா. அது எப்படி யாயினு மாகுக; அம்மட்டும் எல்லாம் சுபமாகவே முடிந்தது; இது நமது முன்னோருடைய பூஜா பலமேயாம்.

விசி. ஆம், எல்லாம் சுபமாகத்தான் முடிந்தது! ஆயினும் பிரதாபசீலருக்கும், விக்கிரமவீரசூரதீரருக்கும் மாத்திரம் காலில் நோய் கண்டது.

வா. ஸ்ரீதத்தா, அவர்களிருவரும் நமது பட்டணத்தைவிட்டு எங்கேயோ ஓடிப் போய்விட்டார்கள். தெரியுமா வுனக்கு?

ஸ்ரீ. தெரியாது—ஐயோ! பாவம்!

வா. 'கெடுவான் கேடு நினைப்பான்' என்று அவர்கள் கெடுமதி அவர்களையே கெடுத்தது. இனி அவர்கள் நமது நாட்டெல்லைக்குள் ஒரு காலும் வரலாகாதென்று ஆக்ஞை செய்துவிட்டேன். ஸ்ரீதத்தா, பராக்கிரமகேது, வாருங்கள்; நாமெல்லோரும் அரண்மனைக்குப் போவோம். ஸ்ரீதத்தா, அவசரத்தில் நடந்த விஷயங்களைப் பற்றிப் பராக்கிரமகேது சில சங்கதிகள் எனக்குக் கூறியபோதிலும், உன் வாயினின்றும் அவைகளை ஆதியோடந்தமாக நான் கேட்கவேண்டும். வாருங்கள் சீக்கிரம், அரண்மனைக் கேகலாம்.

ஸ்ரீ. [போகும்பொழுது தனக்குள்]

"எல்லாமு னடிமையே யெல்லாமு னுடைமையே
எல்லாமு னுடைய செயலே
யெங்கணும் வியாபிநீ யென்றுசொலு மியல்பென்
றிருக்காதி வேத மெல்லாஞ்

சொல்லான் முழக்கியது மிக்கவுப காரமாச்
  சொல்லிறந் தவரும் விண்டு
சொன்னவையு மிவைநல்ல குருவான பேருந்
  தொகுத்தநெறி தானு மிவையே
யல்லாம லில்லையென நன்றா வறிந்தே
  னறிந்தபடி நின்று சுகநா
னாகாத வண்ணமே யிவ்வண்ண மாயினை
  னதுவுநின தருளென்னவே
கல்லாத வறிஞனுக் குள்ளே யுணர்த்தினை
  கதிக்குவகை யேது புகலாய்
கருதரிய சிற்சபையி லானந்த நிர்த்தமிடு
  கருணா கரக் கடவுளே."

[எல்லோரும் போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.








Printed by Dowden & Co., at the "Peerless Press," Madras.